# அம்ருதா
AMRUDHA

வேள்வி 13 கலசம் 152
Volume 13 Issue 152

மார்ச் 2019 ரூ. 25
March 2019 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



வண்ணநிலவன்
ரவிக்குமார்
டிசே தமிழன்
ஆதி பார்த்தீபன்
ஆல்பிரட் ஹிட்ச்காக்
பிரான்ஸிஸ் த்ரூபோ
என். ஜெகநாதன்
பா.அ. ஜயகரன்
ஷங்கர்ராமசுப்ரமணியன்
மைக்கேல் ஹசானவிஸியஸ்
ராம் முரளி
கருணாகரன்
எம். ரிஷான் ஷெரீப்
லக்ஷ்மி மணிவண்ணன்
டி. கண்ணன்
ஸிந்துஜா
ந. பெரியசாமி
மார்டின் பட்லர்

## தமிழ்ப் புலமை மரபும் எதிர்கொள்ளும் சவால்களும்



# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




Rs. 140




Rs. 130




Rs. 170




Rs. 110




Rs. 200




Rs. 100




Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 13 கலசம் 152

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மார்ச்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவி சுப்பிரமணியம்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
**#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ**
**சக்திநகர், போரூர், சென்னை-600116**
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# பின்நகர்ந்த காலம்



வண்ணநிலவன்

பள்ளிநாட்களில் பள்ளிப் பாடங்களும் தேர்வுகளும் பெரும் சுமையாக இருந்தன. பள்ளிக் கல்வியில் அறவே ஈடுபாடு இல்லை. ஆனால், உலக நடைமுறையின் படி, கல்வி கற்றே ஆகவேண்டியதிருந்தது. விளையாட்டு, சினிமா, நூலகங்கள் இவையே மனதுக்கு விருப்பமாக இருந்தன. உள்ளூரில் நடக்கும் பொதுக் கூட்டங்களுக்குச் செல்லுகிற பழக்கமும் இருந்தது. என் வயதை ஒத்த பையன்கள் பொதுக் கூட்டங்களுக்குச் செல்வது மிக அபூர்வம். ஆனால், எனக்கு எதனாலோ அரசியல் கூட்டங்களுக்குச் செல்லும் பழக்கம் ஏற்பட்டது.

1954இலோ 1956இலோ திருநெல்வேலி டவுனில், மந்திரமூர்த்தி ஸ்கூலுக்கு அருகே இருந்த சண்முகம் மைதானத்தில், சி.பா. ஆதித்தனார் நடத்திய நாம் தமிழர் கட்சியின் மாநாடு இரண்டு நாட்கள் நடந்தன. அந்த மாநாட்டுக்கு இரண்டு நாட்களும் காலையிலேயே போய் உட்கார்ந்துவிடுவேன். அப்போது எனக்கு எட்டு வயதுதான். அந்த வயதில் அரசியலைப் பற்றி என்ன தெரிந்திருக்கும்? கூட்டங்களில் பேச்சாளர்கள் மடைதிறந்த வெள்ளம்போல் பேசுவதைக் கேட்பது ஒரு கேளிக்கையாக இருந்தது. விளையாடுவது, சினிமா பார்ப்பது, கதை படிப்பது மாதிரி, மேடைப் பேச்சைக் கேட்பதும் கேளிக்கையாக, பொழுதுபோக்காக இருந்தது. அந்த இரண்டு நாள் நாம் தமிழர் கட்சி மாநாட்டில் ஈ.வெ.ரா. பெரியார் பேசினார். இரண்டாம் நாள் இரவு, ஈ.ஆர். சகாதேவன் நடித்த 'புலித்தேவன்' நாடகம் நடந்தது.

எந்தக் கட்சியின் கூட்டம் நடந்தாலும் போய் உட்கார்ந்து விடுவேன். காங்கிரஸின் அரசியல் என்ன; திமுகவின், கம்யூனிஸ்ட்களின், பிரஜாசோஷலிஸ்ட் கட்சியின் அரசியல் என்ன என்பதெல்லாம் ஒன்றும் தெரியாது. ஆனால், அரசியல் கூட்டங்கள் பொழுதுபோக்க உதவின. பள்ளியின் பாடச் சுமையிலிருந்தும் இரவு பாடம் படிப்பதிலிருந்தும் தப்பிக்க பொதுக்கூட்டங்கள் உதவின.

ஆனால், இன்றும்கூட, என்னுடைய அரசியல் ஈடுபாடு என்பது தேர்தலில் வாக்களிப்பதுடன் சரி. வாழ்க்கை என்பது முரண்கள் நிறைந்ததுதான். இதில் நமது தேர்வு என்பது பெரும்பாலும் இல்லை. காற்றில், அது அடிக்கிற பக்கமெல்லாம் இழுத்துச் செல்லப்படும் சருகு போல்தான் வாழ்க்கை அமைந்து விடுகிறது. 'துக்ளக்' என்ற அரசியல் பத்திரிகையில், அரசியலில் ஈடுபாடே இல்லாத நான் பணிபுரிய நேர்ந்தது இப்படித்தான். எனக்குப் பிடித்தமானது நவீன இலக்கியம். ஆனால், இலக்கியம் சோறு போடாது; பிழைப்புக்காக பத்திரிகையாளனாக வாழ நிர்பந்திக்கப்பட்டேன். காலப்போக்கில் அதை மனம் ஏற்று அங்கீகரித்தது.

தமிழில், முழு நேர எழுத்தாளனாக வாழ்வது மிகக் கடினம். முழுநேர இலக்கியவாதியாக வாழ்வது தற்கொலைக்கு ஒப்பானது. பாரதிகூட முழு நேர இலக்கியவாதியல்ல. பத்திரிகைகளில் வேலைபார்த்துத்தான் அவர் பிழைப்பு நடத்த வேண்டியதிருந்தது. புதுமைப்பித்தனும் இப்படித்தான் வாழ்ந்தார். பத்திரிகை எழுத்து, இலக்கிய எழுத்து என்ற இரண்டு குதிரைகளிலும் ஏறிப் பயணித்தவர்கள் பாரதி, புதுமைப்பித்தன், க.நா.சு.

தி. ஜானகிராமன் ஜீவனோபாயத்துக்காக சிறிது காலம் ஆசிரியராகவும் பிறகு அகில இந்திய வானொலியிலும் வேலை பார்த்துத்தான் தனது 'மோகமுள்', 'அம்மா வந்தாள்', 'மரப் பசு', 'உயிர்த்தேன்' போன்ற அற்புதமான நாவல்களையும் சிறுகதைகளையும் எழுதினார். கரிச்சான் குஞ்சு ஆசிரியர், நகுலன் கல்லூரி ஆசிரியர், லா.ச.ரா. வங்கி ஊழியர், சுந்தர ராமசாமி துணி வணிகத்தில் ஈடுபட வேண்டியதிருந்தது. கு.அழகிரிசாமி பிழைப்புக்காக மலேசியாவில் போய் தினசரிப் பத்திரிகையில் வேலை பார்க்க நேர்ந்தது; வை.கோவிந்தனின் சக்தி பத்திரிகையிலும் வேலை பார்த்தார். அவர் இறக்கிற தருவாயில்கூட சோவியத் லேண்ட் பத்திரிகையில்தான் வேலை கிடைத்தது. பூமணி கூட்டுறவுத் துறையிலும், பா. ஜெயப்பிரகாசம் மக்கள் தொடர்புத் துறையிலும், வண்ணதாசன் வங்கியிலும் பணிபுரிந்து கொண்டுதான் எழுத்துலகில் இயங்கினார்கள். இப்படி இரட்டைக்

குதிரைகளில் சவாரி செய்தவர்களே எல்லோரும்.

கி.ராஜநாராயணன், மௌனி போன்றவர்கள் தங்களுக்குக்கிடைத்த பூர்வீகச் சொத்து, நிலபுலன்களை நம்பியே இருந்தனர். மௌனி ரைஸ் மில் வைத்திருந்தார். அசோகமித்திரன் ஆரம்ப காலத்தில் ஜெமினியில்தான் வேலை பார்க்க நேர்ந்தது. ஜி.நாகராஜன் கணிதப் பேராசிரியராக வேலை பார்த்தார். ஜெயகாந்தனின் மனைவி பள்ளி ஆசிரியையாகப் பணிபுரிந்து குடும்ப பாரத்தை ஏற்றுக்கொண்டதால், ஜெயகாந்தனால் முழுநேர எழுத்தாளராக வாழ முடிந்தது.

தர்முசிவராமுக்கு நண்பர்கள் உதவினார்கள். கோணங்கியை அவரது குடும்பம் காப்பாற்றுகிறது. தர்மு, கோணங்கி இருவரும் திருமணம், மணவாழ்வு என்ற சிக்கல்களிலிருந்து தப்பித்தவர்கள். பிரம்மச்சாரிகள். அதனால், இலக்கியத்துக்குத் தங்களை முழுதாக அர்ப்பணிக்க முடிந்தது. முழுநேர எழுத்தாளனாக, கவிஞனாக வாழ உலகம் அனுமதிக்காது. ஆங்கில மொழியில் எழுதுகிறவர்கள் வேண்டுமானால், சற்றுத் தரம் குறைந்த துப்பறியும் மர்மக் கதைகளை எழுதி முழுநேர எழுத்தாளனாக வாழலாம். நானும் பத்திரிகை இலக்கியம் என்ற இரட்டைக் குதிரையில் சவாரி செய்கிறவனே.



கவிஞர் விக்கிரமாதித்யனை நான், வண்ணதாசன், கலாப்ரியா போன்ற திருநெல்வேலி நண்பர்கள், நம்பிராஜன் என்றுதான் குறிப்பிடுவோம். அவருக்கு வீட்டில் இட்ட பெயர் அது. பெரும்பாலான இலக்கியவாசகர்களும் அவரது சக கவிஞர்களும் 'நம்பி' என்ற நம்பிராஜனை, 'அண்ணாச்சி' என்று அழைக்கின்றனர். 1970 72 வாக்கில் நம்பிராஜன் 'சங்கரி மணாளன்' என்ற பேரில்தான் கவிதைகள் எழுத ஆரம்பித்தார். இந்தப் புனைபெயரில் அக்கால கணையாழி, ஞான ரதத்திலெல்லாம் கவிதைகள் எழுதியிருக்கிறார்.

எனக்கு பண்டிகைகளைக் கொண்டாடுவது, கோயில் குளங்களுக்குப் போவது, உறவுக்காரர்கள் வீடுகளில் நடைபெறும் விசேஷங்களில் கலந்துகொள்வதுபோன்றகலாசாரச்செயல்பாடுகளில் பெரிய ஈடுபாடு கிடையாது. நம்பிராஜனுக்கு இதிலெல்லாம்நம்பிக்கையும்ஈடுபாடும்உண்டு. 80களில் அவர் ஜோதிடமெல்லாம் கற்றுக்கொண்ட பிறகு, அவருடைய ஆன்மீக ஈடுபாடு அதிகமாகிவிட்டது. வாழ்வின் ஏற்றமும் தாழ்வும் சந்தோஷமும் துக்கமும் ஹிந்து ஆன்மீகம் கூறுவது போல், முன் ஜென்ம பலாபலன்கள் என்பதை அப்படியே ஏற்றுக்கொண்டு வாழ்ந்து வருகிறார். இதற்காகக் கோவில்களில் பரிகார வழிபாடுகள் செய்வதையெல்லாம் அவர் ஏற்றுக்கொள்கிறார். சொல்லப்போனால், இது திருநெல்வேலி சைவ வேளாளர்களின் வாழ்வியல் முறை. இன்றும் 'வெள்ளாம் பிள்ளைகள்' என்றும் 'சைவப் பிள்ளைமார்' என்றும் கூறப்படுகிறவர்களின் வாழ்வை அப்படியே சுவீகரித்து வாழ்கிறவர் விக்ரமாதித்யன் நம்பி.

அவரது கவியுலகம் இதைச் சுற்றியே அமைக்கப்பட்டது. வண்ணதாசன் என்ற கல்யாண்ஜியின் கவிதைகள் ஒரு அபரிதமான அழகுணர்வினாலும் படிமங்களாலும் உருவானது என்றால் விக்ரமாதித்யனின் கவிதைகள் அவரது நேரடியான அனுபவங்களையும் அவரது நம்பிக்கைகளையும் வெளிப்படுத்துகின்றன. பெரும்பாலான கவிதைகளில் சாம்பி, வெதும்பிப் போன மனமே அடிநாதமாக ஒலிக்கிறது. எல்லா வாசகர்களும் கருதுவது போல், சித்தர் பாடல்களின் தொனியை விக்ரமாதித்யன் தனது கவிதைகளில் மிக எளிதாகக்கொண்டு வந்துவிடுகிறார். கலாப்ரியாவின் பல கவிதைகளைப் போல் கஷ்டப்பட்ட நடுத்தரவர்க்கத்தின் குரல் விக்ரமாதித்யன் கவிதைகளிலும் ஒலிக்கிறது.

இன்று விக்ரமாதித்யன், தமிழ்க் கவிஞர்களில் முக்கியமானவராகக் கருதப்படுகிறார். தற்காலத் தமிழ்க் கவியுலகில் அவரது இடம் உறுதியானது, தனித்துவமானது. கவிதைகளில் அவருக்கு உள்ள ஈடுபாட்டிற்குச் சற்றும் குறைவில்லாதது, உரை நடை எழுத்தின் மீதான அவரது ஈடுபாடு. எழுபதுக்களில் தேவதேவன் கவிதைகள் ஆரம்பித்தபோது, அப்போதே அவரது கவி மொழியின் தனித்துவத்தை இனம் கண்டுகொண்ட திறமைசாலி விக்ரமாதித்யன்.

தனது மனவுலகையும் இலக்கிய வாழ்வையும் தக்கவைத்துக்கொள்ள இன்றும் பெரும்பாடுபட்டுக் கொண்டிருப்பவர் நம்பிராஜன். அவருடைய அப்பா அழகிய சுந்தரம் அவரை எப்படியாவது





நிரந்தர வருமானம் கிடைக்கும் ஒரு வேலையில் தள்ளிவிட எவ்வளவோ முயற்சித்தார். இதற்காக கூட்டுறவுப் பயிற்சிப் பள்ளியில்கூட நம்பிராஜனைச் சேர்த்துவிட்டார். நம்பிராஜனால் அப்பயிற்சியைச் தொடர முடியவில்லை. பத்திரிகையாளனாகவும் முயற்சி செய்தார். 'தராசு', 'அஸ்வினி', 'விஸிட்டர்' போன்ற வாரப் பத்திரிகைகளிலும் சிறிது காலம் வேலை பார்த்தார். இப் பத்திரிகைகள் எல்லாமே சிறிது காலம் வெளிவந்து நின்றுவிட்டன. ஒரு வேளை 'குமுதம்', 'விகடன்' போன்ற பெரிய பத்திரிகைகளில் வேலை கிடைத்திருந்தால், 'மாத வருமானம்' என்ற மாயாஜாலம் நிறைவேறியிருக்குமோ என்னவோ?

நான் துக்ளக்கில் வேலைக்குச் சேர்ந்த பிறகு, 1978 வாக்கில் அவருடைய குடும்பம் சென்னைக்கே குடிபெயர்ந்தது. அவருடைய அப்பா, அம்மா, தம்பி ஆறுமுகம் ஆகியோருடன் நம்பிராஜனும் சென்னைக்கு நிரந்தரமாக் வந்து சேர்ந்தார். மூத்த தம்பி சேகர் ராணுவத்தில் இருந்தார். அக்கா சிவகாமி கல்கத்தாவிலிருந்து குழந்தைகளின் கல்விக்காகச் சென்னையில் குடியேறுவது என்று முடிவு செய்தார். எல்லோரும் சத்யம் தியேட்டர் அருகே உள்ள காண்ட்ரான் ஸ்மித் சாலையிலுள்ள ஒரு வீட்டின் பெரிய அவுட் ஹவுஸில் குடிபுகுந்தனர்.

அக்காவின் கணவர் தனுஷ்கோடி கல்கத்தாவில் ஒரு நிறுவனத்தில் ஸ்டெனோவாக வேலை பார்த்து வந்தார். மனைவியையும் குழந்தைகளையும் சென்னைக்கு அனுப்பி வைத்தவுடன், மாதா மாதம் செலவுக்குப் பணமும் அனுப்பி வந்தார். ராணுவத்தில் வேலை பார்த்துவந்த தம்பி சேகரும் ஏதோ தன்னால் இயன்றதை அனுப்பி வந்தார். எப்படியோ குடும்பம் ஓடிக்கொண்டிருந்தது. குற்றாலம் பராசக்தி கல்லூரி கூட்டுறவுக் கடையில் நம்பிராஜனின் மனைவி வேலை பார்த்து வந்தார். அதனால் நம்பி சென்னைக்கும் தென்காசிக்குமாக அலைந்து கொண்டிருந்தார்.

நான் அன்னை நாட்டில் ஆசிரியர் குழுவில் வேலை பார்த்து வந்தபோது, சென்னைக்கு வந்திருந்த நம்பிராஜன், என்னிடம் 'கடல்' என்ற தலைப்பில் எழுதி வைத்திருந்த குறுங்கவிதைகளைப் படிக்கத் தந்தார். பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி கவிஞர் மீரா, தனது அன்னம் பதிப்பகத்தின் சார்பில் பல கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளை அச்சிட முயற்சி செய்தார். எனக்கும் மீராவுக்கும் இருந்த நட்பினால் நான் அவரிடம் நம்பிராஜன் கவிதைகளைப் பிரசுரிக்கும்படி கூறினேன். நம்பியிடம் கவிதைகளைப் வாங்கி மீராவுக்கு அனுப்பிவைத்தேன். 'ஆகாயம் நீலநிறம்' என்ற தலைப்பில் அக்கவிதைகளை மீரா வெளியிட்டார். ஏதோ என்னால் இயன்றது, மீராவிடம் சொல்லி அவரது முதல் தொகுப்பு வெளிவர முயற்சித்தது. நம்பிராஜன் என்னுடைய முதல் சிறுகதைத் தொகுதியான 'எஸ்தர்' வெளிவரக் காரணமாக இருந்தார்.

(தொடரும்)

**வண்ணநிலவன்** <ramachandran.u49@gmail.com>

# அஃபூவா கூப்பர்

## Afua Cooper



ரவிக்குமார்

ஜமைக்காவில் பிறந்து கனடாவில் வாழும் கவிஞரான அஃபூவா கூப்பர் முக்கியமான வரலாற்றறிஞருமாவார். ஜமைக்காவில் 1957ஆம் ஆண்டு அவரது பெற்றோருக்கு ஒன்பது குழந்தைகளில் ஒருவராகப் பிறந்த கூப்பர், 1975இல் பட்டப்படிப்பை முடித்த பிறகு, ஜமைக்காவை உலகெங்கும் அறியச்செய்த உலகப் புகழ்பெற்ற ரெக்கே பாடகர் பாப் மார்லியின் ரஸ்தஃபாரி இயக்கத்தில் தன்னை இணைத்துக்கொண்டார். 1979 1980 காலகட்டத்தில் ஜமைக்காவில் மிகப்பெரிய அரசியல் குழப்பம் ஏற்பட்ட நிலையில் 1980ஆம் ஆண்டு கனடாவில் குடியேறினார். டொரண்டோவில் பள்ளி ஆசிரியையாக பணியாற்றிக்கொண்டே தனது கவிதைகளை பல்வேறு கலாச்சார நிகழ்வுகளில் நிகழ்த்தி வந்தார். கறுப்பினத்தைச் சேர்ந்த பெண்களின் உரிமைகளுக்காக கனடா முழுவதும் பயணம் செய்து பல்வேறு பிரச்சாரங்களில் ஈடுபட்டார். கனடாவில் கறுப்பின கலாச்சார மறுமலர்ச்சி இயக்கத்தை முன்னெடுத்தவர்களில் அவர் முக்கியமானவராகக் கருதப்படுகிறார்

1988ஆம் ஆண்டு அஃபூவா கூப்பர் இஸ்லாத்தைத் தழுவினார். நெல்சன் மண்டேலா சிறையிலிருந்து விடுதலையானதைக் கொண்டாடும் விதமாக டொரண்டோவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கலாச்சார நிகழ்ச்சியில், இருபத்தைந்தாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் கூடியிருந்த கூட்டத்தில், அவர் தனது கவிதையை நிகழ்த்திக் காட்டியது மிக முக்கியமான பதிவாகக் கருதப்படுகிறது

அஃபூவா கூப்பர் , 19 ஆம் நூற்றாண்டில் கனடாவில் அடிமையாக வைக்கப்பட்டிருந்தவரும் பின்னர் அடிமைத்தனத்தை ஒழிப்பதற்காகப் போராடியவருமான ஹென்றி பிப் (Henry Bibb) என்பவரது வாழ்க்கை வரலாற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டத்தைப் பெற்றார். 'Doing Battle in Freedom's Cause' என்ற தலைப்பிலான அந்த ஆராய்ச்சி நூல் விற்பனையில் சாதனை படைத்தது.

2009ஆம் ஆண்டு அவர் உருவாக்கிய 'Black Canadian Studies Association (BCSA)' அமெரிக்கா, இங்கிலாந்து, கனடா ஆகிய நாடுகளைச்சேர்ந்த கறுப்பின ஆய்வாளர்கள் ஒன்று கூடி விவாதிக்கும் மையமாகத் திகழ்கிறது.

இவரது கவிதைகள் ஐந்து தொகுப்புகளாக வெளியிடப் பட்டிருக்கின்றன. பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. கறுப்பின மக்களின் இசை வடிவங்களில் தேர்ச்சிகொண்ட இவர் தனது கவிதைகளை மேடையில் நிகழ்த்துவதில் புகழ்பெற்றவர்.

1.

இந்த ரோஜாக்கள் நீ எனக்குத் தந்தவை  
அந்த சனிக்கிழமை மாலையில் கோடையில்  
இப்போது மங்கிப் பழுப்பாகிவிட்டன பூச்சாடியில்  
என்றபோதும் நான் மறுக்கிறேன்  
இவற்றைத் தூக்கியெறிய  
இந்த வதங்கிப்போன ரோஜாக்களை  
ஏனென்றால் ஒவ்வொருமுறையும் நான் அவற்றைப் பார்க்கும்போதும்  
நினைத்துக்கொள்கிறேன்  
போன கோடையில்  
நாம் சேர்ந்து கழித்த ஒவ்வொரு  
நொடியையும்  
துல்லியமாக

மயக்கும் பார்வையை
விரல் நுனிகளின் தொடுதலை
மிருதுவான உறுதியான
பழுப்புநிற முலைக்காம்புகளை வருடும்
இளஞ்சிவப்பு நாக்கின் நுனியை
எனக்குக் கீழ் நீ இயங்கிய விதத்தை
என்மேல் நீ இயங்கிய விதத்தை
பேராசையோடு
நீ மென்மையாகக் கடித்த விதத்தை

எனக்குத் தோன்றுகிறது
காதலின், களிப்பின் அற்புதங்களை
மீண்டும் கண்டுபிடித்தபடி
நாம் அந்தக் கோடையைக் கழித்தோமென்று

பிறகொரு மாலை நீ பிரிய வேண்டிவந்தது
நீ என்னிடம் தந்தாய் சிவப்பு ரோஜாக்களை
"நம் வேட்கையை கௌரவிக்க" என்றாய்

வதங்கிப்போன இந்த ரோஜாக்களைப் பார்க்கும்போது
அந்த வேட்கை பொங்குகிறது எனக்குள்
இப்போது
நினைத்துக்கொள்கிறேன் உன்னை

2.
உடலும் உடலும்
  சந்திக்கும்போது
எதுவும் தடுக்கமுடியாது
  அவற்றின் கூடலை

மனசும் மனசும்
  சந்திக்கும்போது
எதுவும் தடுக்கமுடியாது
  வேட்கையை

ஆன்மாவும் ஆன்மாவும்
  முத்தமிடும்போது
எவரால் தடுக்கமுடியும்
  காதலை?

3.
பகலிலிருந்து இரவைப் பிரிக்கும் எல்லைக்கோட்டில்
கீழ்வானில்
அதிகாலை எட்டி நடக்கத் தொடங்கும் நேரத்தில்
எரிநட்சத்திரங்கள்
வானத்தின் இப்புறமிருந்து அந்தப் புறமாகப்
பாய்ந்து வீழ்கின்றன

தாங்கள் பிடித்த மீன்களோடு
கரைசேரும் மீனவர்களின் கூச்சலைத்
தொடர்கின்றன
பேருந்துகளின் இரைச்சல்
சேவல்களின் கூவல்

ஆயிரம் இதழ்கள் கொண்ட
என் தாமரைக் கிண்ணத்திலிருந்து
நான் கண்ட கனவின்
பொன் நிறத்தை ரோஜா நிறத்தை
நீ உறிஞ்சிக் குடிக்கும்போது
எனது சருமத்தை வற்புறுத்தும் உன் உதடுகளால்
நான் உறக்கத்திலிருந்து நழுவி
விழித்தெழுகிறேன்

இன்னொரு காலம் இன்னொரு இடம்
நீ ராஜாவாக அல்லது அவனது
தளபதியாக இருக்கிறாய்
காலையின் ஊதா கவிந்திருக்கிறது
நம் மேல்
நாம் நிகழ்த்துகிறோம் இந்தத்
தொன்மையான சடங்கை

ஆயிரம் இதழ்கள் கொண்ட என்
தாமரைக் கிண்ணத்தில் நீ மூழ்கும்போது
எனது சருமத்தை வற்புறுத்தும் உன் உதடுகளால்
துயிலிலிருந்து நழுவி எழுகிறேன் நான்

பொன் நிறம் ரோஜா நிறம்
அடர் நீலம் ஊதா நிறம்
நீலப்பச்சை ரத்தச் சிவப்பு
மூச்சும் காற்றுமாக
நெருப்பும் மின்னலுமாக
இடியும் புயலுமாக
தாளமும் ஒப்பாரியுமாக
பாயும் நட்சத்திரங்கள்
குமுறும் அலைகள்
வாழ்வாக மரணமாக
பல லட்சம் கருஞ்சிவப்புச் சந்திரன்கள்
வெடிக்கின்றன
ஆ..ஹ்

அரசனின் படையில் தளபதியாக இல்லாவிட்டால்
அரசியின் நடனக்குழுவில் தலைவனாகவாவது இரு






**ரவிக்குமார்** <adheedhan@gmail.com>

# ஹெமிங்வேயின் படகு

(Hemingway's Boat by Paul Hendrickson)



டிசே தமிழன்

ஹெமிங்வேயின் படைப்புக்களைப் போல அவரது 38 அடிகள் நீண்ட படகும் பிரபல்யமானது. அவரது இரண்டாவது மனைவியாகப் போகின்ற Paulineன் செல்லப்பெயரான Pilarயே இந்தப் படகிற்குச் சூட்டப்படுகின்றது. பிறகு 'ஆயுதங்களுக்கான விடைகொடுத்தல்' (A Farewell to Arms) நாவலின் ஒரு பாத்திரமாகவும் இந்தப் பெயர் வருகின்றது. 'ஹெமிங்வேயின் படகு' என்கின்ற இந்த நூலில் ஹெமிங்வே படகை வாங்கிய 1934இல் இருந்து அவர் தற்கொலை செய்த 1961 வரை இந்தப் படகிலும், படகைச் சுற்றியும் நடந்த சம்பவங்கள் விபரிக்கப்படுகின்றன.

Paulineயோடான திருமணத்தில் இருக்கும்போதே ஹெமிங்வேயிற்கு, பத்திரிகையாளரான Martha Gellhornயோடான உறவு வருகின்றது. பின்னர் மார்த்தாவை 1940இல் திருமணம் செய்கின்ற ஹெமிங்வே, ஹாவானாவில் வீடு வாங்கி அங்கேயே மார்த்தாவுடன் வாழத் தொடங்குகின்றார். படகும் அவர்களுடன் கூடவே அமெரிக்காவிலிருந்து கியூபாவிற்கு வருகின்றது. இதனோடு Pillar ஹவானாக் கடற்கரையிலே தன் 'வாழ்வை'த் தொடங்கி, இப்போது ஹெமிங்வே நினைவாலயம் ஆக்கப்பட்ட ஹவானா வீட்டில் தேடிவருபவர்களுக்கு காட்சியளித்துக் கொண்டுமிருக்கின்றது.

இந்தப் படகிலிருந்தும் ஹாவானாவில் இருந்துமே ஹெமிங்வே அவரது முக்கிய நூல்களை எழுதியிருக்கின்றார். மார்த்தாவோடு இருந்த காலத்தில் 'யாருக்காக மணி அடித்தது?' (For Whom the Bell Tolls) எழுதியதைப் போல, அவரது நான்காவது மனைவியான மேரியுடன் இருந்தபோது அவரது பிரபல்யம் வாய்ந்த 'கிழவனும் கடலும்' (The Old Man and the Sea) இங்கேயே எழுதியிருக்கின்றார். அத்தோடு விமர்சகர்களால் மிக மோசமென விமர்சிக்கப்பட்ட 'Across the Rrivers and into the Trees'ம் இதே காலகட்டத்திலேயே எழுதப்பட்டிருக்கின்றது.

இந்த நூல் 'ஹெமிங்வேயின் படகு' பற்றியது என்றாலும் அந்தக் காலப்பகுதியில் ஹெமிங்வே எழுதிய நாவல்கள், பிறருக்கு அவர் எழுதிய கடிதங்கள் (ஹெமிங்வே அவரது வாழ்க்கையில் 6000-7000 கடிதங்கள் எழுதினார்) என்பவை விரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதேபோல ஹெமிங்வேயிற்குள் இருக்கும் மூர்க்கம், அவ்வப்போது எழுதமுடியாது தோற்றுப் போய்க்கொண்டிருக்கின்ற எழுத்தாளனின் ஆற்றாமை, அவரது மனைவிமார் / காதலிகள் போன்றோருடன் அவர் நடந்துகொண்டவிதம் என்பவை அற்புதமாக, பல்வேறு சான்றாதாரங்களினூடு விபரிக்கப்படுகின்றன.

ஹெமிங்வேயின் பெண்கள் எனப் பார்த்தால், ஹெமிங்வே தனது தாயை ஒருபோதும் மன்னிக்கத் தயாரில்லை என்பது தெரிகின்றது. தனது தகப்பனின் தற்கொலைக்குத் தனது தாயே காரணமென நம்பியதோடு, தாயிற்கு எழுதும் கடிதங்களிலும் தொடர்ந்து அதனைக் குறிப்பிட்டுக்கொண்டே இருக்கின்றார். அவரது தாய் மீளவும் தன் மகனோடு இணைய விரும்பும் ஒவ்வொரு முயற்சியையும் உதறித்தள்ளியபடியே ஹெமிங்வே இருந்திருக்கின்றார். எனினும், அவரது முதல் நாவல் வருகின்றபோது தாயின் பெயரை ராயல்டியில் சேர்த்து, அவருக்கு மாதாந்தம் பணம் அனுப்பிக்கொண்டும் இருந்திருக்கின்றார் என்பதும் குறிப்பிடத்தக்கது. மீள இணையும் வாய்ப்பு இருவருக்கும் இயலாது போயினும், அவரது தாய் இறந்துபோனபோது ஹெமிங்வே தாயின் இறப்புக்குப் போக மறுத்திருக்கின்றார்.

ஹெமிங்கே முதல் காதலியைச் சந்திப்பது, இத்தாலியில் முதலாம் உலக மகாயுத்தத்தின்போது அவர் காயப்படுகின்றபோதாகும். தன்னைக் காப்பாற்றும்தாதியையே விரும்பி,திருமணம் செய்ய விரும்புகின்ற ஹெமிங்வேயிற்கு அந்தப் பெண்ணுக்கு ஒரு இத்தாலியரோடு உறவு வருவதால் அதுவும் கைகூடாது போகின்றது. அதன் பிறகு அவர் நான்கு



பேரைத் திருமணம் செய்திருக்கின்றார். ஒரு உறவில் இருக்கும்போது இன்னொரு உறவு தேடி ஓடி யிருக்கின்றார். மனைவியர் இருக்கும்போது இளம் பெண்களோடு காதல் வயப்பட்டதோடல்லாது, பாலியல்தொழிலாளியையும் விருந்துகளுக்கு அழைத்து வந்திருக்கின்றார்.

அவர் சந்தித்த பெண்கள் வெவ்வேறு விதங்களில் அவரின் நாவல்களில் வந்திருக்கின்றனர். கதைகளில் வரும் இந்தப் பாத்திரந்தானா அந்தப் பெண் என்று வாசிப்பவர்கள் நினைப்பதற்கு இடந்தராது அவர்களிடம் இல்லாத விடயங்களையும் இந்தப் பாத்திரங்களுக்கு இணைத்து வேறொரு வடிவத்திலும் கதையைக் கொண்டு செல்வதிலும் ஹெமிங்வே நுட்பமானவராக இருந்திருக்கின்றார்.

ஹெமிங்வேயின் ஐம்பதுகளில் அவருக்கு 21வயதான அடீரியானாவுடன் 'காதல்' வருகின்றது. ஹெமிங்வே அவரது மனைவி மேரியுடன், வெனிஸில் சில மாதங்களுக்குத் தங்கி நிற்கும்போதே அடீரியானாவை ஹெமிங்வே சந்திக்கின்றார். பிறகு ஐரோப்பாவில் இன்னொரு பகுதியிலும் அடீரினானாவைச் சந்தித்து உடனே தன் காதலைச் சொல்லிவிடுகின்றார். திருமணம் செய்யக் கேட்கும்போது அடீரீயானா அவருக்கு ஏற்கனவே மனைவி இருப்பதை ஞாபகப்படுத்துகின்றார். என்கின்றபோதும், ஹெமிங்வேயால் அந்தக் காதலைக் கைவிடமுடியாது, கியூபாவிற்கு வந்தபிறகும் நிறையக் காதல் கடிதங்கள் அடீரீயானாவிற்கு எழுதுகின்றார்.

அடீரியானா தனது தாயாருடன் ஹவானாவிற்கு வருகின்றார். ஹெமிங்வேயுடன் மேரியுடனும் சில மாதங்கள் தங்கி நிற்கும் அடீரியானாவை அவரது



தோற்றுப்போன நாவலான 'Across the rivers and into the trees'ல் முக்கிய பாத்திரங்களில் ஒன்றாகியும் விடுகின்றார். இதையெல்லாம் சகித்துக்கொண்ட அவரது மனைவி மேரி, ஹெமிங்வேயின் இறப்பின் பின் எழுதுகின்ற நூலான 'How it was' மிக விரிவாக இந்தத் தங்கலில் நடந்த சம்பவங்களை விபரித்து ஹெமிங்வேயின் இன்னொரு பக்கத்தை நமக்குக் காட்டியுமிருப்பார்.

'Across the rivers and into the trees' தோல்வியும் விமர்சகர்களின் எள்ளலுமே ஹெமிங்வே அவரது முக்கிய நாவலான 'கிழவனும் கடலும்' எழுத உத்வேகத்தைக் கொடுக்கின்றது. இந்தக் கதை கடலில் உண்மையில் நடைபெற்று ஹெமிங்வேயிற்கு அவரது நண்பரொருவரால் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த நாவலில் வரும் கிழவனின் பாத்திரத்தை ஹெமிங்வே











அவரது படகிற்கு கப்டனாக இறுதிவரை இருந்த ஸ்பானியரான கிறிகோரியோ புயண்டஸின் சாயலில் எழுதியிருப்பதாய்ச் சொல்லப்படுகின்றது. ஹெமிங்வேயின் மனைவிகளைவிட இந்தக் கப்டனே ஹெமிங்வேயுடன் நீண்டகாலமாக கூடவே இருந்தார் என்றொரு நகைச்சுவையும் உண்டு.

ஹெமிங்வேயிற்குள் நெடுங்காலமாக இருந்த மனவழுத்ததை ஆற்றுப்படுத்தும் ஒரு விடயமாக இந்தப் படகும் மீன் பிடித்தலும் அமைந்திருக்கின்றது. கியூபாப் புரட்சியின் பின்னும் ஹெமிங்வே கியூபாவிலேயே இருந்திருக்கின்றார். எனினும், மன அழுத்தப் பிரச்சினை உக்கிரமாக 1960இல் அமெரிக்காவிற்குப் போய் ஒரு வருடத்திற்குள்ளேயே தற்கொலையைச் செய்கின்றார்.

தனிப்பட்ட நண்பர்களுக்கு உதவி செய்வதில் தயங்காத ஹெமிங்வேதான் தனது விமர்சகர்கள் மீது நாம் நினைத்தும் பார்க்காத மொழியில் பதில் கடிதங்களும் எழுதியிருக்கின்றார். அவரது முதல் நாவலைப் பிரசுரிக்க, பதிப்பாளர் தேடிக்கொடுக்கின்ற Scott Fitzgeraldடன் பிறகு கோபிக்கவும் செய்கின்றார். ஸ்காட்டின் இறப்பின்பின் அவரை விளங்கிக்கொள்வதாக ஹெமிங்வே குறிப்பிட்டாலும் அதைத் தெரிந்துகொள்ளாமலே ஸ்காட் இறந்துபோகின்றார்.

அதேபோன்று அவரோடு நீண்டகாலமாய் வாழ்ந்து அவரது பல்வேறு வன்முறைகளைத் தாங்கிக்கொண்ட மேரியின் முன் தான், அவரது காதலியான 21 வயதான அன்டீரியானாவை மட்டுமின்றி, பாரில் சந்திக்கும் ஒரு பாலியல் தொழிலாளியையும் கூட்டிக்கொண்டும் வருகின்றார். இவற்றை உளவியல் பிரச்சினைகளுடன் அல்லாடிக் கொண்டிருக்கின்ற ஒரு மனிதர் என்பதைவிட, ஆண் என்கின்ற அடையாளத்திற்குள் வைத்து ஹெமிங்வேயைப் பார்ப்பதுவேறொருதிசையில் நமக்கு பலவிடயங்களைப் புலப்படுத்தவும் கூடும்.

ஹெமிங்வேயின் படைப்புக்களைப் போல, அவரது தனி வாழ்க்கையும் எளிதில் புரிந்துகொள்ள முடியாததும், பல்வேறு உள்ளடுக்குகள் கொண்டதுமாகும். அவர் இரசிக்கத்தக்க மனிதர் என்றாலும் மிகுந்த சிக்கலான மனிதர் என்கின்ற விம்பமும் ஹெமிங்வேயைப் பற்றி நினைக்கும்போது கூடவே வந்துவிடுகின்றது. அதுவே ஹெமிங்வே கிட்டத்தட்ட அவரது வாழ்க்கைக் காலத்தைப் போல, 60 ஆண்டுகள் அவர் இறந்து கடந்தபின்னும், அவரைப் பற்றித் தேடித்தேடி நம்மை வாசிக்கத் தூண்டுகின்றது. ●

டிசே தமிழன் <elanko@rogers.com>

# மோகனா அனட் சாமுவேல் தெரேசா

**ஓவியம்:** Paul Klee



ஆதி பார்த்தீபன்

சில முக்கிய குறிப்புகள்:

ஆற்றுப்படுக்கையை அண்டியதாக சில துணிதுவைப்பவர்களின் குடிசைகள். அதற்கு முன் பகுதியில், துணிகளை காயப்போடுவதற்காய் நடப்பட்ட கொடிமரங்களில், நள்ளிரவு லாம்பு வெளிச்சம் பட்டு ஒரு கொடியைப்போல காற்றில் அசைந்தபடி காய்கிறது யாரோ ஒருத்தியின் மாதவிலக்கு துணி.

சவரம் செய்த பொழுதே முகத்தை கீறிய கத்தியில் துடைக்கப்படாத இரத்தம்; பாழடைந்த வீட்டு உட்பகுதியில் கரை படிந்த மேலைத்தேய கக்கூஸ் அறை; கரப்பான் பூச்சிகள் உள்ளேறி வெளிவந்து கொண்டிருக்கும் உடைந்த பியானோ; குழந்தை கடித்து எறிந்த பாதி ஆப்பிள்; மயிர் கற்றைகள் நிரம்பிய ரோலிங் சீப்பு; பிட்டப் பகுதியில் ஓட்டைகள் விழுந்த யட்டி; பெட்டிக்குள் செருகப்பட்டு குப்பைவாளியில் போடப்பட்டிருக்கும் கொண்டம் பை; கீழ் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் போர்ன் சீடி; வாட்ஸ் ஆப் குழுவில் பரவி கொண்டிருக்கும் பக்கத்துக்கு வீட்டு பெண்ணின் நியூட் செல்ஃபீ; பாடப் புத்தகங்களை கிழித்து கச்சான் பைகள் தயாரிக்கும் சிறுவன்; உடைந்த கிரிக்கெட் மட்டையை காட்டி புதிதாக ஒன்று வாங்கித்தருமாறு நச்சரிக்கும் சிறுவன்; காய்ந்த கிட்டிப்புள் கிளுவந்தடியால் கண்களில் அடிபட்டு போதனா வைத்தியசாலையில் சரியான சிகிச்சையின்றி கண்கள் அழுகிய நிலையில் இருக்கும் சிறுவனின் விதவைத் தாய்; பப்பில் போதை அதிகமாகி சக நண்பியின் மார்பை கசக்கி உதை வாங்கிக்கொண்டிருக்கும் இளைஞன்; அரிசியரைக்கும் இயந்திரத்தில் தவறி சிக்கி சிதைந்த கைகளுடன் பலசரக்கு கடையில் மலிபன் பிஸ்கட் வாங்கும் இளைஞன்; பால்கனியிலிருந்து குதித்து தற்கொலை செய்த கவர்ச்சி நடிகையின் உடைகளை கோடி ரூபாவுக்கு ஏலம் விடும் நிறுவனம்; கிழிந்த ஆடையை தினசரி பத்திரிகையால் மறைக்கும் சந்நி தியில் அமர்ந்திருக்கும் பிள்ளைகளால் விரட்டப்பட்ட தாய்; நெத்தியில் துப்பாக்கி வைக்கப்பட்டிருக்கும் இளைஞனின் சேர்ட் பொக்கற்றுக்குள் மடிக்கப்பட்டிருக்கும் அவனது ஆறுமாதக் குழந்தையின் புகைப்படம்; மேசையின் விளிம்பிலிருந்து விழுந்து கொண்டிருக்கும் அனாதைப் பிணங்களை புகைப்படமெடுக்கும் கமரா; வயதுக்கு வந்துவிட்ட தனது மகளின் மார்புக்கு கச்சையை சரியான அளவெடுத்து தையல்காரனிடம் சுருக்கிதைக்கச்சொல்லும் தாய் மேலும் மேலும் இந்த உலகத்தில் இந்த நொடியில் நடந்து கொண்டிருக்கும் வன்முறைச் சம்பவங்களை எழுதும், விறகுகளுக்கு பதிலாக தான் சேமித்த புத்தகங்களை அடுக்கி தன்னை எரிக்கச் சொல்லி இறந்து போன எழுத்தாளன்.

அவனது முடிக்கப்படாத கடிதத்தின் தலைப்பு இவ்வாறு இருந்தது: வன்முறைகளான பேரன்பே, ஒரு கணமேனும் அணைத்துகொள்வதற்காய் தகிக்கும் வெம்மையே, முத்தம் ஊறிக் கனத்த உதடே, நீரன்பே, குளிரும் டிசம்பரில் தவித்துக்கொண்டிருக்கிறேன்.

இப்ஸ் மலையின் மேற்பக்கத்தில் ஏறித்தான் மழையை ரசிக்கவேண்டும் என்பார்கள். மலைமுகட்டில் எந்தவொரு காலநிலைக்கும் மழையென்பதே கொஞ் சம்கூட இருக்காது. இது எல்லாம் சின்ன வயசில் நான் கேட்ட கட்டுக்கதைகளாக இருக்கவேண்டும் என்றுதான் இதுவரை நம்பியிருக்கிறேன். சின்ன வயசில் கட்டுக்கதையாக இருந்தவை எல்லாம் இளம் வயதில் சாகசங்களாகவும் முதுமையில் திரும்ப கதைகளாகவும் மாறிபோகும். அதை வேறொரு தலைமுறை கட்டுக்கதைகளாக நம்பியிருக்கும். இந்த சுழற்சிதான் இந்த பூமி. பின்னோக்கி வாழ்க்கையை வாழும் சக்தி இருந்தால்தான் வாழ்க்கை சரியாக புரிபடும். நாங்கள் முன்நோக்கியே பழக்கப்பட்டுவிட்டோம் என்பதே எத்தனை அபத்தம் தெரியுமா?

அவளுக்கே தெரியாமல் அவளை சந்திக்கவேண்டும் என்ற ஒரு நாளில்தான் அவளை சந்தித்தேன். மகாசா நகரத்தில் இருந்து இப்ஸ் மலையை நோக்கி பிரயாணிக்கும் ரயில் வண்டியில் ஏறிக்கொண்டால் மூன்றரை





மணித்தியாலங்களில் இப்ஸ் மலையின் அடிவாரத்தை அடைந்துவிடலாம். இரண்டு பக்கமும் குன்றுகளாகவும் மலைத்தொடர்களாகவும் பாதை நீளும் மழைநாளில் முகில்கள் கீழிறங்கி பனிப்புகாரைபோல பாதை காட்சியளிக்கும். ரயில் வண்டிக்குள் புகார் புகுந்து கொள்ளும். அருகில் இருப்பவர்களையே அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் இருக்கும். இப்படியாக மாய தோற்றமளிக்கும் பயணத்துக்காகவே வாழ்தலை நிகழ்த்துபவர்கள் உண்டு. முற்று முழுதாக புகையாக காட்சியளித்த அந்த ரயிலில் மக்கள் கூட்டமும் நிரம்பி வழியும். இடை வழியில் கிட்டடத்தட்ட பதினாறு கிராமங்கள் சூழ்ந்து காணப்படும் பாதையது.

கிராமங்களை இனங்காணுவதற்காக பிரத்தியேகமாக மின்மினி விளக்குகளாலான ஊர் எல்லை உண்டு. அத்துடன் ரயிலின் சில்லுகள் உராய்வு. இடையில் பசி எடுக்கும் போது சாப்பிட்டுக்கொள்வதற்காக சில கேக் வகைகளையும் பலகாரங்களையும் வைத்திருந்தேன். மரண இருள். மழை வேகமாக பொழிந்துகொண்டிருந்தது. 13ஆம் நம்பர் அடிக்கப்பட்ட இருக்கை யன்னல் கரையுடன் அமைந்திருந்தது. பக்கத்தில் இருப்பவர்களை அறியமுடியாதபோதும், அவர்களின், என்னை உரசிக்கொண்டிருக்கும் கைகளை கொண்டு அது ஆணா பெண்ணை என்பதை அடையாளம் காணக்கூடியதாகவே இருந்தது. முன்னாள் இருப்பவர்களின் நீட்டப்படிருக்கும் கால். இவற்றை தவிர முகங்களை அறியமுடியாதபோதும், அவர்களுடைய பிரத்தியேக வாசனைத் திரவியங்களின் நறுமணத்தை தெளிவாக முகர முடிந்தது.

எனக்கு வாசனைத் திரவியங்களில் ஒரு வகை ஒவ்வாமை. நீண்ட நேரம் சுவாசிக்க முடியாதபடி இருக்கும். நன்றாக மழிக்கப்பட்ட அக்குள் பகுதியை உடைய பெண்கள் எப்போதும் எனக்கு அந்நியமானவர்கள். குளிர்ச்சியான நீர்க்குளியலின் பின் வெயில் வியர்க்க அக்குளிலிருந்து வரும் ஒருவகை எலுமிச்சை வாசத்துடன் ஒரு பெண்ணை கண்டுகொண்டால் அதை போன்ற ஒரு திருப்திகரமான நாள் இருக்க முடியாது. தூரத்தில் பாதைகளுக்கு நடுவில் இருந்த கடும் மஞ்சள் நிறமான, பெரிய வட்டவடிவமான, வெட்டப்படட கொள்ளிக்கட்டையைப் போல நிலவு இருந்தது. அதன் மேலே வழிந்து அதை அணைத்துக் கறுப்பாக்கும் திரவத்தைப்போல கரும் புகார். அந்த கரும் புகார் விளக்க மீண்டும் அந்த கொள்ளிக்கட்டை பற்றிக்கொள்ளும். பக்கத்தில் இனங்காணப்படாத மனிதர்கள்.

அப்போது எனக்கு பக்கத்திலிருந்த சீட் யாரோ ஒரு திண்ம உடலால் நிரப்பப்பட்டதை உணர்ந்தேன். மழைக்குள் நனைந்த நாயின் வாடை எனது நாசித்துவாரங்களில் உணர்த்தியது. பிறகு, ஒரு சிறிய நாயின் கீச்சிட்ட குரல். பிறகு, அதன் தலை எனது காலை உரசியது. அது ஒரு குட்டி நாய் மழைக்குள் நனைந்திருக்கின்றது. விரக்தியுடன் எனது முகத்தை பார்த்தது. ஒளி பொருந்திய இரண்டு கண்களும் எனக்குள் நேராக பாய்ததைப்போல உணர்தேன். நன்றாக மழைக்குள் நனைந்துவிட்டதே அது. தலையில் நீரை வைத்துவிடக் கூடாது. தடிமனும் சளியும் வந்துவிடும். பயணப்பைக்குள் இருந்த துவாயை எடுத்து அதன் தலையை நன்றாக துடைத்துவிட்டேன். என்னை

அது கருணை பொங்க பார்த்தது. “என்னோடு வந்து விடுகிறாயா காம்யு” என்றேன். அது பதில் சொல்லாமல் மீண்டும் ஒரு முறை பார்த்தது. “காம்யு காம்யு என்னோடு வந்து விடுகிறாயா? இல்லை என்கிறாயா. காம்யு உனக்கு பசிக்கிறதா?”

“இல்லை இப்போதுதான் சாப்பிட்டது” என்றாள் அவள். இவ்வளவு இனிமையான குரல் உள்ள பெண்ணுக்கு இந்த கடவுள் தலையை குடுத்து இருக்கலாம். “அதன் பெயர் காம்யு இல்லை” என்று தொடர்ந்தாள். “அதன் பெயர் லாலாலா. ” “லா லா லா நல்ல பெயர்தான், காம்யுவை விட. லா லா லா... அவற்றுக்கு மொழி உண்டு. அவை பேசிக்கொள்ளும்.”

அவை என்பதைவிட அவன்கள், அவள்கள் என்று சொல்லியே பழக்கப்பட்டிருந்தேன். அவன் அப்படித்தான் முதன்முதலாக எனது வாழ்க்கைக்குள் நுழைந்தான். காஸனோவா என்று அவனது பெயரை வைத்தபொழுதே அவன் ஒரு மிகச்சிறந்த காதலனாக வரவேண்டும் என்று விரும்பினேன். yes he became. அவனது உடல் அவனது பருவ வயதில் திமிர்ந்து செழிசெழித்தது. அவன் தனது குரலினால் பேசிக்கொண்டபோது, அது ஒரு சிங்கத்தின் கர்ச்சனையாக ஒலித்தது. ஆனாலும், அவன் நடுத்தர வர்க்கத்தை சேர்ந்தவன். வாரத்துக்கு இரண்டுமுறை குளிக்க வார்த்தேன். ஆனாலும், அவனது பருவவயதின் போது அவன் உலகத்தின் வழமைக்கேற்ப காதல் செய்பவனானான். தேர்வு நன்றாக இருக்கவேண்டும் என்பார்கள். காதலில் என்ன தேர்வடா மயிரே என்று கேட்பேன் நான். அதில் தேர்விருக்கக் கூடாது. அது ஒரு அனர்த்தம் போல நிகழ்ந்துவிட வேண்டும். எந்த ஜீவனுக்குள்ளும் பொதுவாக இருந்துவிடவேண்டும். இது மனிதன், இது மிருகம் என்ற பொருளே கிடையாது. அனர்த்தம் அப்படித்தான் உருவாகும், எல்லாம் வழமையானதைப்போல இயங்கிக் கொண்டிருக்கும். பின் மறுகணத்தில் பெரிய வெடிப்பு சத்தம். பாறி விழும் ஓசை கண நேரத்தில் எல்லாம் முடிந்துவிடும்.

முடிந்த அடுத்த கணம், முதல் கணம் திரும்பாதா என்று பரிதவிப்போம். ஒரு தாய் குழந்தையை பிரிந்து அழுவாள். யாரோ யாரோ ஒரு உயிரை பிரிந்து அந்த கணத்தில் தனியனாவோம். எல்லாம் முடிந்துவிடும். ஒரு கணமும் முடிந்திருக்கக் கூடாது என்ற ஏக்கமும், ஒரு சலனமான பதற்ற உணர்ச்சியுடன் கூடிய பயத்தையும் அந்த சுத்தமான அன்பு தரும்.

காஸனோவாவின் காதலி பெயர் சிலி. வீட்டுக்கு ஐந்து வீடு தள்ளியிருந்த வக்கீல் ஒருவனின் வீட்டில் வளர்ந்தாள். கருப்பும் வெள்ளையும் கலந்த திரண்ட பிட்டங்களையுடைய பொம்மனேரியன் வகையை சேர்ந்தவள். தெரியுமா ஒரு புதன் கிழமை, குளிரான காலைவேளையில், அலுவலகம் செல்லும் அவசரத்தில் கதவை திறந்து வெளியேறினேன். காஸநோவாவை மறந்துவிட்டேன். முழுமையாக அவனை கவனிப்பதை தவறிவிட்டேன் அன்றைய நாளில். அன்றைய தினம் அலுவலகம் முடிந்து வந்து கொண்டிருக்கும் போது, கிட்டதட்ட பொழுது மங்கியிருந்தது. வானத்தில் மஞ் சள் திட்டுகள் நிறைந்த வரி. வீதியில் செல்பவர்களை தெளிவாக அடையாளம் கண்டுபிடித்துவிட முடியாது.

அது காஸநோவாவேதான். அவன் அங்கே என்ன செய்து கொண்டிருந்தான் என்று புலப்படவில்லை. அவளின் வீட்டுக்கு முன்னால் மண்டியிட்டு அமர்ந்திருந்தான். அவனது முன்னங்கால்கள் அவர்களது வீடு வாசலை நோக்கி நீண்டிருந்தது, ஒரு யாசகனைப்போல. எதையோ நீட்சியான வரலாற்றில் எதிர்பார்ப்பவனைப்போல. யெஸ் ஹி இஸ். அவன் சிலிக்காக காத்திருந்தான். நான் அவனை பலம் கொண்டவாறு அழைத்தேன். “காஸநோவா வா” என்றேன். அவன் என்னை திரும்பி பார்த்தானே தவிர எனது அழைப்பை எதிர்பார்த்தவனாக இல்லை. அப்படி என்னதான் இருக்கிறது இந்த அன்பில். விசர்தனமான காதல். பட்டினி கிடந்தால்தான் இவன் சரிப்படுவான். அவனை வீட்டுக்குள் சேர்க்கவே கூடாது.

இவ்வாறான எண்ணங்களுடன் வீட்டை அடைந்தேன். நள்ளிரவில் மழை பெய்ய ஆரம்பித்திருந்தது. நீண்ட நேரத்தின் பின் ஞாபகம் வந்து விழித்துக்கொண்டேன். அவன் இப்போது வீட்டுக்கு திரும்பியிருப்பான். ஆனாலும், மூடியிருக்கும் எனது கதவினால் அவனால் வந்திருக்க முடியாது. மழைக்குள் தொப்பலாக நனைந்து போய் இருப்பான். ஊளை சத்தமோ அவன் அழுகின்ற ஒலியோ எனக்கு கேட்கவில்லை. இவ்வளவு அமைதியாக அவன் வீட்டுக்கு முன்னாள் நின்றதை நான் இதுவரை அறிந்திருக்கவில்லை. சாதாரண நாட்களிலேயே நேரத்துக்கு சாப்பாடு கொடுக்காமல் விட்டால், கிழித்து நெளியும் குரலினால் கூச்சலிடுபவன். சட்டென்று தட்டிய மின்பொறியினால் எழுந்தமர்த்து கொண்டவன் போல் விழிப்புணர்ச்சி அடைந்தேன். கதவைத் திறந்து வெளியே பார்க்கும் போது, விளம்பர நிகழ்ச்சிக்கு வந்து கார் கதவை திறந்து எழும்பும் பிரபலத்தின் மேல் தெறிக்கும் காமரா ஒளியைப்போல, மின்னல் தெறித்தது. பிறகு, இடி. முன் பக்க கேற்றுக்கு செல்வதற்கு முதல் நான்கைந்து மின்னல் வெட்டி தள்ளியும் அந்த ஒளியில் அவன் வாசலில் நிற்பதன் அறிகுறிகள் ஏதுமில்லை. கதவை திறந்து பார்த்து மனம் நிலைகொள்ளாது, அவனின் பெயரை பெரிதாக வாய்விட்டு கூவினேன்: “காஸநோவா.”

மின்னல் பளிச்சிட்டது. சிலியின் வீட்டு வாசலில் இருந்து, அவனது கண்கள் ஒரு பிரகாசமான பளிங்கைப்போல என்னை நோக்கி திரும்பியிருந்தது. என்ன முட்டாள் தனம் செய்கின்றான் இவன். “பைத்தியக்கார நாயே இங்க வா” என்று கோபம் வருமளவு கத்திவிட்டேன். அவனிடம் இருந்தது ஒரு பாறையின் கனமான நிலை. அதை என்னால் அசைத்துப் பார்க்கவே முடியாது என்பதை நீண்ட நேரத்தின் பின் உணர்ந்தேன். “முட்டாள் இப்படியே கிடந்து செத்துப் போ” என்று இறுதியாக பலம் கொண்ட வரை கத்தினேன். பிறகு, திரும்பி வந்து அரைத்துயிலில் காலைவரை இருந்தேன்.

என்னால் முழுமையாக தூங்க முடியாத நிலைக்கு காரணம் கேள்விகள் தான். இந்த உலகத்தில் தூக்கத்தை மறுதலிப்பவை எப்போதும் கேள்விகளாகவே இருக்கும். எனக்குத் தெரிந்த ஒரு முதியவர் இருந்தார். என் வீட்டிலிருந்து சில தொலைவு தள்ளியிருந்த, நன்றாக பராமரிக்கப்படாத வீட்டில் நீண்டகாலமாக

வசித்து வந்த அவருக்கு, திருமணமாகாமல் இருந்தது. இருந்தும் இல்லாமல் இருத்தலின் சுதந்திரம் அவரிடம் இருந்தது. இந்த பூமியில் அவ்வாறான சுதந்திரத்தை பெற்றிருப்பவர்கள் பெரும்பாலும் விளிம்புநிலை மக்களாக அவதானிக்கப்படுகின்றார்கள். அவரும் அவ்வாறே ஊர் மக்களால் அவதானிக்கப்பட்டார். எந்த நேரமும் பூட்டியிருந்த வீட்டு சுவர்களில், மழை முடிந்து, காய்ந்த மண் கரைந்த சுவர்களில், ஊதா நிறமான பூக்களை தாங்கி நிற்கும் ஒரு வகை படர்கொடி படர்ந்து இருந்தது. ஒரு நாளில் இரண்டு தடவைகள் மாத்திரம் அவரது வீட்டின் முன் பக்கத்தில் இருந்த கடையில் அவரை அவதானிக்க முடிவதாக பேசிக்கொண்டார்கள். அந்த செடியின் இலைகள் இருதய வடிவமானவை. நீண்ட நாட்களாக சரியாக வெட்டி பராமரிக்கப்படாததால் இப்போது அந்த செடியே வீடாகவும் சாலையாகவும் மாறியிருந்தது. அந்த முதியவரை நான் ஒரே ஒரு நாள் கண்டிருக்கின்றேன். ஒரு காலைவேளையில் உப்புமூடையை கடையில் இறக்கிவிட்டு, அந்த வீட்டை அவதானித்த போது, ஒரு கோணிப்பையை தனது இடையில் கட்டியிருந்த முதியவர் அந்த உடைந்த தகர கதவை மெல்ல சரிசெய்துகொண்டிருந்தார். நான் அவரை கூர்மையாக பார்த்தேன்.

தேனீக்கள் விலகிபோயிருந்த தேன் கூட்டைபோல, காய்ந்தும் காயாமலும் எச்சில் நீர் ஈரம் ஊறியிருந்த அவரது தாடி நீளமாக நெஞ்சில் விழுந்து பரவி யிருந்தது. ஈரம் காய்ந்து போன சதுப்பு நிலத்தைப்போல முகத்தின் தோல் வெடித்த சுருக்கம். ஆனாலும், கண்களின் என்னும் அந்த ஒளி மறைந்து போகவில்லை. அந்த மனிதர் அபாரமான சுறுசுறுப்புடன் இருந்தார். தாடி மெல்ல விலகிய மேல் நெஞ்சுப் பகுதியில் ஏதோ ஒரு பெயர் பச்சை குத்தப்பட்டிருந்தது.

பிறகு, மீண்டும் நான் ஒரு வாரம் கழித்து அந்த இடத்திற்கு வந்தபொழுது. கடைக்காரர் முதியவர் இறந்துவிட்டதை கூறினார். எவ்வாறு எத்தனை துடிப்பு அந்த முதியவரிடம் இருந்தது. என்னால் நம்ப முடியவில்லை. ஆனாலும், வீட்டின் முன் புறத்தில் சடைபோட்டிருந்த பச்சை நிற தாவரம் இப்போது இல்லை. கிட்டதட்ட ஐம்பது கிலோவுக்கு மேலே புகையிலை சுருட்டின் அடிக்கட்டைகள் வீட்டில் இருந்து எடுக்கப்பட்டதாகக் கடைக்காரர் மேலும் சொல்லிக்கொண்டு இருந்தார். கரையான் அரித்த நீலநிற சீத்தை சேலை ஒன்றும், பொத்தல் விழுந்த இரண்டு புறமும் மூடிய பொக்கெட் வைத்த லினன் சேர்ட்டும்; வேறு என்ன இருந்தது? கொஞ்சம் முடிக்கற்றைகள், ஒரு பெண்ணினுடையது (நீளத்தின் தன்மையின் பரிமாணங்களை அளந்த போது அது ஒரு பெண்ணினுடையது). துடைக்கப்படாத நீள்வட்ட பத்துரூம் கண்ணாடி. அதில் ஒரு பெயர் இருந்தது, பத்மா. மேலும், வீட்டின் உள்புற சுவர்களின் பல மூளை முடுக்குகளில் எல்லாம் சுருட்டு கரியால் பத்மா என்ற பெயர் எழுதப்பட்டிருந்தது. கிழவரின் பெயர் என்ன என்று தெரியுமா?

"கிழவரின் பெயர் என்ன?" என்று கேட்டாள், ஆர்வம் மேலிட. ச்ச நான் காஸநோவா பற்றி சொல்லிக்கொண்டே வந்து விட்டு திடீர் என்று கிழவரின் கதையை ஆரம்பித்தேன். இப்போது எந்த கதையை பூரணப்படுத்துவது? கிழவரின் கதை முழுவதுமாக முடிந்துவிட்டது, உங்களிடம் பெயர் சொல்லாததைத் தவிர. காஸநோவாவின் கதை ஆரம்பித்திருக்கிறது, உங்களிடம் பெயர் சொன்ன திலிருந்து. கிழவரின் பெயர் சாமுவேல்.

பிறகு, காஸநோவா என்ன ஆனான்?. மறுநாள் விடிந்தது. காஸநோவாவை பார்ப்பதற்காக புறப்பட்டு போனேன். கண்ணை பெரிதாக திறக்காமல் அரைகுறையாக திறந்து வைத்திருந்தான். உடல் குளிர்ந்து போய், தலை விழுந்து போய் இருந்தது. சாகப்போகிறான் போல. கண்ணீர் வந்துவிட்டது. முட்டாள் காஸநோவா என்று கதறித்தான் விட்டேன். அவனது தலையை எனது நெஞ்சில் சேர்த்து அழுத்தினேன். அவன் முக்கால்வாசி இறந்துவிட்டான். அவனது வாயிலிருந்து மஞ்சள் நிற சளிபோன்ற திரவம் வழிந்தது. அவனது துடிப்பு மெல்ல அடங்கிக் கொண்டிருந்தது. முட்டாள் என்னைவிட்டு போய்விடாதே. உன்னைத்தவிர எனக்கு யார் இருக்கிறார்கள் சொல். தயவு செய்து இன்று மட்டும் பிழைத்துக்கொள். எனக்காக பிழைத்துகொள்ளடா.

அவனை விட்டால் எனக்கு யாரும் இல்லை. அவன் எனது தனிமைக்குள் நுழைந்த போது, இந்த உலகத்தில் யாருக்காகவோ ஒருவர் படைக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற சித்தாந்தத்தை உறுதிப்படுத்திக்கொண்டேன். அது இப்போது முடிவை நெருங்கியிருக்கிறது. அவனது இதயத்துடிப்பு சரியாக பத்துமணிக்கு அடங்கிபோகும் போது நான் கிட்டதட்ட மயங்கிப்போய்விட்டேன்.

காஸநோவா எனது தம்பி, எனது தாய், எனது காதலி. அவன் எனது தம்பி,. உங்களது தம்பி. அவனது காதலிக்காக இறந்துபோய்விடுகின்றான். நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் இந்த உலகத்தின் ஒட்டுமொத்த காதலையும் வெறுப்பீர்கள். கொலையாளியாவீர்கள். அந்த கொலையை ஒட்டுமொத்த உணர்வுகளுக்கு எதிராகவும் நிகழ்த்தலாம். எதைக்கொன்றாலும் அது கொலையை தானே குறிக்கின்றது. சிலர் மனசாட்சியை கொன்றுவிடுவதால்,சிலர் உணர்வுகளை கொல்கிறார்கள் அவ்வளவுதான்.

நான் எனது கதையை முடித்த பிறகும் ரயில் பெட்டிக்குள் நிறைந்திருந்த பனிப்புகார் தெளிந்த பாடில்லை. இந்த பெரிய வரலாற்று சொற்களின் பின், அவளது கை தழுதழுத்த பிடிமானத்துடன் எனது கைகளை பற்றியிருந்தது. லாலாலா இருவரின் கையையும் ஒரு சேர நாக்கால் வருடியது. நாவின் ஈரம் கசிந்த கைகளை, கைகளால் அளைந்த பின் விலக்கிக்கொண்டோம். புகை விலகியிருந்ததைப்போல இருந்த அந்த தருணத்தில், அவளது முகம் தெரிந்து விடும்.

நீல நிற முழு நீள சட்டையை அணிந்திருந்தாள். நீளமான கைக்குட்டையால் தலையை மொட்டாக்கிட்டதைப்போல மேவி மூடியிருந்த அந்த முகத்தில் துண்டாக ஒரு தர்பூசணியைபோல உதடுகள் குவிந்து பிளந்திருந்தன. பொத்திய கைகளுக்குள் துடிதுடிக்கும் மின்மினிகளைப்போல அவளது இமை மடல்கள் அசைந்தன. அவளது பெயரும்கூட

மின்மினிதான்.

மின்மினி இந்த தலைமுறைகளுக்காக நாங்கள் சேர்த்து வைப்பது இப்படியான நினைவுகளைத்தான். அபூர்வமான இயற்கையின் பரிபூரணத்தில் நாங்கள் தொலைந்து கொண்டிருக்கிறோம். கண்கூசும் பச்சைக்குள் அடுத்த நொடியே நாம் காணாமல் ஆகிவிடுவோம். கனன்று பரவும் மரங்களின் சுவாசமாகி விடுவோம். நின்றெரியும் தீக்கங்குகளின் நாக்கில் நமதிருவர் மனங்களும் ஒரு நொடி உருகி எரியும்.

பனிப்புகார் விலகிய பொழுது இறுதி தரிப்பிடத்திற்கு புகைவண்டி வந்து சேர்ந்தது. இப்ஸ் மலையடிவாரமாக இருக்க வேண்டும். நீ ஏன் இப்ஸ் மலைக்கு சென்றுகொண்டிருக்கின்றாய் மின்மினி?

"மலையுச்சியில் மேல் தளத்தில் எனது வீடு உள்ளது. அங்கே நானும் சில ஆண்டுகளுக்கு முன் தனது பிள்ளைகளால் கைவிடப்பட்ட ஒரு மூதாட்டியும் மாத்திரம் வசிக்கின்றோம்."

"அத்துடன் லா லா லா" என்று அவனை சுண்டு விரல்களால் சுட்டி காட்டி சிரித்தேன்.

"நீ எனது வீட்டுக்கு வருகின்றாயா?"

"குடிப்பதற்கு ஏதும் கிடைக்கும் என்றால்" என்றேன்.

"நிச்சயமாக மலைகளில் வளரும் தேவதாரு மரங்களின் பூக்களில் இருந்து தயாரிக்கப்படும் சிவப்பு நிற தேநீர் இந்த மலைவாழ் இல்லங்களில் பிரசித்தம். இது உனது முதலாவது பயணம் என்பதால் இங்கு நீ இருக்கப்போகும் ஒவ்வொரு காலை வேளையும் இனி உனக்கு அற்புதமாக இருக்கும். மலையடிவாரத்திலிருந்து மேலநோக்கி நீண்டதூரம் நடந்தே ஆகவேண்டும். நாளின் ஆரம்பத்தில் ஏறுவதற்கு ஆரம்பித்தால் மாலை மங்கும் வரை தொடர்ச்சியாக நடந்து செல்ல வேண்டும். மலையில் ஏறுவதென்பது அவ்வளவு சுலபமானதில்லை. உன்னை பார்த்தால் பல நாட்கள் சாப்பிடாதவனைப்போல இருக்கின்றாய். உனது தோள்மூட்டுக்கள் மேலே தூக்கி கீழே விடுவதற்குகூட வலுவில்லாததைப்போல இருக்கின்றது. உப்புக் கசிந்த அங்கொன்றும் இங்கொன்றுமாய் சரியாக சீர்செய்யப்படாத தாடியுடன் இருக்கின்றாய். குறிப்பாக சொன்னால் மூன்றாவது நாளில் உயிர்த்தெழுந்த ஜேசுவைப்போல. என் அப்படி சொல்கின்றேன் என்றால் உனது கண்களின் பிரகாசம் அதி அற்புதமாக இருக்கின்றது."

"அப்படியாக இருக்கலாம். நான் ஜேசுவைப்போல உனக்குத் தோற்றமளித்தால் இந்த தேவதாரு மரங்கள் எல்லாம் சிலுவைகளாக நான் உணர்கிறேன். இதில் எந்த மரத்தில் நான் தொங்கிக்கொள்வது சொல். அல்லது என்னை ஓர் மரத்தில் அறைந்துவிடுவதாய் யோசனைகளை கொடு."

மௌனங்களே பிறகு, நீண்டநேரத்தில் பாதைகளை வழிகாட்டின. பாதைகள் அழைத்து செல்லும் மௌனங்களின் தூர தரிசனம் போல அந்த நொடி இருந்தது. இந்த உலகத்தில் கூடவருவதற்காய் உன்னைப்போல யாரவது இருந்து இருக்கலாம் மின்மினி. உனக்கு ஏற்கனவே ஒரு பாட்டி இருக்கின்றாள். அத்துடன் லா லா லா. எனக்கு இயங்கிக் கொண்டிருத்தலே உறவு. நான் இயங்கிக் கொண்டிருத்தலை உறவாகிக்கொண்டேன். அந்த இயங்குதல் இல்லையென்றால் நான் எப்பொழுதோ காலி. காலியான ஏதோவொன்று. எந்த அர்த்தமும் இல்லாமல் இருப்பேன். காலியான மலர், அர்த்தமே இல்லாமல் மலர்வேன், அர்த்தமே இல்லாமல் உதிர்வேன். காலியான கோப்பை நிரம்புதலுக்குக் காத்திருப்பேன். அந்த கோப்பையின் இயங்குதல்தான் நான். மேலே இருந்து விழுந்து கொண்டிருக்கும் அதே கோப்பை. காலியான கோப்பையின் இயக்கம்தான், அந்த உடைதலுக்கு முதல் மேசையில் இருந்து விழுந்து கொண்டிருக்கும் நிலை. அதனால்தான் இயங்குதல்தான் எனக்கு உறவு. ஒரு நிமிடம் நான் தனியாக சிந்தித்துவிடக்கூடாது தெரியுமா? நான் எதற்கும் உதவாதவன் என்ற எண்ணம் ஒரு நிமிடம் வந்துவிடக்கூடாது. அதற்காக உடைந்து கொண்டிருக்கின்றேன்.

"அப்படி சொல்லாதே. உன்னைப்போல தான் நானும். நான் உனது கையை கோர்த்துக்கொள்ள விரும்புகிறேன் நீ அனுமதித்தால்" என்றாள்.

கைகள் நடுநடுங்க, மூச்சு வெடித்து ஒலிக்க, அந்த நிமிடத்தில் அவளது கைகளை பற்றிக்கொண்டேன்.

"இல்லை, இது சாத்தியம் என்று நினைக்கிறாயா" என்றாள்.

"ம்ம் இல்,லை உண்மையாவே இல்லைதான்."

மறுநிமிடமே. கைகள் விலகிக்கொண்டன. அன்பின் போதை நிகழ்த்தும் இந்நிகழ் கணங்களின் முன் நான் எல்லாவற்றையும் மறந்துவிடுவேன். சில சமயங்களில் அன்பையே. அன்பை மறந்த அந்த நிமிடத்தில்தான், நாம் வாழ்க்கைக்கும் வாழ்க்கை முழுமைக்கும் வாழ்வின் பின் கணமும் நிகழும் நித்திய அன்பு சாத்தியமாகும். உண்மை என்னவென்றால், அது ஒரு பெரிய கதை, அதை சொல்லி முடிப்பதற்கு இந்த சிறிய கதை போதாது.

அது ஒரு அட்டகாசமான நாவல். நீளமாக எழுத வேண்டும். அதற்கான மனநிலை வாய்க்கவில்லை என்பதே உண்மை. ஆனால். சுருக்கமாக சொல்வதென்றால். நான் முன்பே கூறியதைப்போல. எனக்கு தாய், தந்தை, சகோதரர்கள், எல்லாருமே உயிருடன் இருக்கின்றார்கள். ஆனால், அவர்களை நான் மறந்துவிட்டேன். அன்பின் பெரும் பிரவாகம் அவர்களை மறக்கவைத்து விட்டது. ஏனென்றால், நான் அன்பைக்கொண்டாடுகின்றேன் மின்மினி.

இவ்வாறாக தான் அரைகுறையாக அந்த குறிப்பை சொல்லியபடியே மலையுச்சியை அடைந்தோம். இப்ஸ் மலையின் சிகரம் மேகங்கள் நிறைந்து காணப்பட்ட ஒரு பரந்த வெளி. அங்கே மனிதர்கள் முகங்களற்றவர்களாகத் தோற்றம் அளித்தார்கள். "முத்தம் மட்டும் இட்டுக்கொள்ளலாம் மின்மினி. தடையில்லை, யாரும் பார்க்க போவதில்லை" என்று சிரித்தேன்.

முகங்களே இல்லாமல் முத்தம். இந்த மலை இப்படி மர்மங்களாக இருப்பதால்தான் அழகாக இருக்கின்றது.



"அந்த மலையுச்சியைப் பார். அங்கே ஒரு பெண் கையில் சிமிலி லாம்புடன் அலைந்து கொண்டிருக்கிறாள். ஒரு வயதான பெண். அந்த லாம்பு கைகளில் இருந்து ஊசலாடிக்கொண்டு இருக்கின்றது. அதன் மஞ்சள் ஒளியோ அடுத்த அடுத்த கணங்களில் நிலைமாறிக்கொண்டு இருக்கின்றது, அந்த பனிப் புகாருக்கிடையில். அவள் எனது பாட்டி. அருகில்தான் எனது வீடு இருக்கின்றது."

"எப்படி உன்னால் உனது பாட்டியை முகமறியாமலே அறிந்துகொள்ள முடிந்தது?"

"வாழ்க்கையை தொலைத்தவர்கள் எவ்வாறான ஒளியைக் கொண்டாவது அதை தேடிக் கொண்டிருப்பார்கள். அவர்களை அடையாளம் கண்டுகொள்வது மிகவும் சுலபம்."

அற்புதம். ஒரு மெல்லிய காற்று நாசித் துவாரங்களுக்குளால் சென்ற போது அவள் எனது கைகளை பற்றிக்கொண்டாள்.

"நான் வாழ்க்கையை எப்போதோ தொலைத்துவிட்டேன். எனக்காக எல்லாருமே இருந்தார்கள். இப்போது யாருமே இல்லை என்றுதான் நினைக்கின்றேன். எனது ஐந்தாவது வயதிலிருந்து நான் இந்த வீட்டில்தான் தனியாக இருக்கின்றேன். அதற்கு முதல் எனது அப்பா, அம்மா. அவர்கள் இருவரும் நகரத்தில் வேலை செய்தார்கள். அந்த நாளின், அவர்களை நான் பார்த்த இறுதி தருணத்தில், தூரத்தே தெரிந்த அந்த பனிப்புகாருக்கிடையில் அவர்கள் இருவரது கைகளும் ஜோடியாக அசைக்கப்பட்டு மறைந்துபோனதுதான் எனது இறுதியான ஞாபகமாக இருந்தது. நான் பருவமடைந்ததைக்கூட இந்த மலையுச்சியைவிட்டுக் கீழிறங்கியபோது ஒரு மூதாட்டி சொல்லிதான் கேள்விப்பட்டேன். அவள் ஒரு மருத்துவிச்சியும்கூட. காலிடுக்கில் குருதிக் கசிவுக்காக அவளிடம் சிகிச்சை பெறச்சென்றபோது அதைக் கூறினாள்."

மெல்லிய சிரிப்புடன் அவளது கைகளை பற்றிக்கொண்டேன்.

"ஆனால் மின்மினி, நான் உன்மேல் மிகையான அன்பை காட்டவேண்டும் என்றால், அது இந்த கணத்திற்கானதாகத்தான் இருக்கும். இரண்டு தோல்வியுற்றவர்களின் பாடல் இந்த உலகத்தின் மௌனத்தையே குலைத்துவிடும். இரண்டு தோல்வியுற்றவர்களின் கண்ணீர் இந்த மலையின் கணபரிமாணத்தையே சிதைத்து விடும். இரண்டு தோல்வியுற்றவர்கள் எப்போதெல்லாம் இணைகின்றார்களோ அப்போதெல்லாம் இந்த உலகம் சமநிலை இழக்கின்றது. அதை நீ அறிவாயா? உண்மையான நிலை என்னவென்றால், உனது கைகளை பற்றியிருக்கும் தருணத்தில் நான் இந்த பூமியைப்போல இருக்கின்றேன். எனக்குள் இருக்கும் அன்பு பூமியின் அடியாழத்தில் இருக்கும் மக்மாவை போல ஒரு தீக்குழம்பாக தகித்துக்கொண்டு இருக்கின்றது. ஒரு முறை, ஒரே ஒருமுறை உடைந்து வெடித்து அத்தனை அன்பையும் நீ கொட்டிவிட்டு என்று நீ சொன்னால். நான் வெடித்து விடுவேன். பூமியின் மேல்தளத்தில் விழுந்த எனதன்போ ஒரு பாறையைப்போலவே

இருக்கும். அது எனது குற்றமில்லை. நான் ஒரு பூமியாக இருந்தேன். எனதன்போ பூமியின் மையத்தில் ஒரு பாறையின் திரவநிலை. அதனால் சுத்தமான அன்பு என்னிடம் இருந்தும் ஒரு பாறையின் கனத்துடன் இறுகி இருப்பதற்காய் வருந்துகின்றேன்.

மேலும், இந்த பூமியில் துக்கமான விடயங்கள் பல இருந்தும் கொடிய துக்கமாக எனக்குத் தோன்றியது அன்புதான். விலகியிருக்கும் அன்பு. இவ்விடத்தில் நான் இருக்கின்றேன். கண்ணுக்கு எட்டிய தூரத்திலேயே நாம் அன்பு செய்யப்படுபவர்கள் இருப்பார்கள். ஆனாலும், பலதடவை தோல்வியுற்ற அயற்சியில் அவர்களிடம் அந்த அன்பை பரிமாறிக்கொள்ளாமலே இருப்போம். தனது நடு மையத்தில் உயிரை சேமித்து வைத்திருக்கும் முக்கால் பாகம் இறந்த விதையைப்போன்ற நிலை அது.”

ஆம், அவளின் கைகளை மேலும் இறுக்கமாக பற்றிக்கொண்டேன். என்னைப் பொறுத்தவரையில் நான் அவ்வாறான வித்தை போல இருந்தேன். நீர்த்துளி விழுந்தபடியிருக்கும் உயிர்ப்பதற்கான முயற்சிகள் இருக்கும். ஒரு உந்துதல். ஆனாலும், துளிர்விட முடியாது அந்த உயிர்த்துளியும் இறுதியில் வற்றிப்போகும் நான் அவ்வாறாக இருந்தேன். நான் முக்கால் பகுதி இறந்து போன விதை. எனக்குள் இருப்பதோ ஒரு பூமியதிர்வை ஏற்படுத்திவிடும் உந்துதல். ஆனாலும், எனக்குள் எல்லாமே முடிந்துவிட்டது. நான் ஒரு கடவுளாக இருக்கும் பட்சத்தில் நான் ஒரு கடவுளை தேடி கண்டடைவேன். அப்படி இல்லாமல் நான் ஒரு சாத்தானாக இருக்கின்றேன். எனக்கு தேவை ஒரு சாத்தான். மிகவும் அன்பு காட்டக்கூடிய சாத்தான். அப்படியாக உன்னை கண்டடைந்தேன்.

இப்ஸ் மலையின் மேல் தளத்தில் நின்று இறுக்க அணைத்துக்கொண்டோம் கூட்டுக்கலவி செய்து கொண்டிருந்த மின்மினிக்கூட்டம் ஒரு பந்தைபோல கரு நிற பாறையில் பட்டு உதிர்ந்து பிரிந்தன. “உனது பெயர் என்ன” என்றேன். அதை மறந்துகொண்டு இருக்கிறேன்.

“மின்மினி” என்றாள்

மேலும், “சாத்தியமில்லாத விடயங்களை சாத்தியமாக்குவதுதான் அன்பு மின்மினி” என்றேன். “பிரிதலில்கூட ஒரு வகையான சுதந்திரம் இருக்கின்றதை நீ உணர்வாய். எனது அன்பு பிரிதலின் பின் கிடைப்பது. கண்ணீரில் பிறக்கும் அன்பே, கண்ணீரினாலான அன்பே, உயிரில் விழுந்து இரண்டாக பிளந்துடையும் அன்பே, பேரன்பு. பிறகொரு தருணத்தில் அன்பு எங்களை விடுதலை செய்வதற்காக பிரிந்துகொள் மின்மினி. பிரிதல் என்பதே மிகப்பெரிய சுதந்திரம்தானே. ஆனாலும், முழுமையாக பிரியவேண்டும். இல்லையென்றால் அதுவே வாழ்வின் சிறையாக மாறிவிடும். அதனால்தான் சுதந்திரத்திற்கும் சிறைப்படுத்தலுக்கும் மிகநீளமான வித்தியாசமெல்லாம் இல்லை. காலுக்கு அடியில் இருக்கும் நேரான பாதை திடீரென பிளந்து விடும்போது, எந்த பக்கத்தை நோக்கி செல்வது என்பதை அந்த கணத்தின் மனநிலை எப்படி தீர்மானிக்கின்றதோ அதைப்போல, இரண்டில் ஒன்றை ஒரு கணத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும். இரண்டையும் முழு வலிமை கொண்டு இணைக்க நினைக்கும் பிரயத்தனங்கள் கூடாது. ●

**ஆதி பார்த்தீபன்**
<aathiabi13@gmail.com>

Form IV

Statement about ownership and other particulars about newspaper 'AMRUDHA' as required to be published under section 19-D subsection (b) of the Press andRegistration of Books Act read with Rule 8 of the Registration of Newspapers (Central Rules) 1956

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | CHENNAI |
| 2 | Periodicity of the publication | Monthly |
| 3 | Printer's name | A.Chandran, Ayyanar Offset. 10 Subba RaoNagar, Choolaimedu, Chennai-94 |
| 4 | Publisher's name, nationality and address | G.Thilakavathi<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 5 | Editor's name, nationality and address | Dr Prabhu Thilaak<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders, holding more than one percent of the total capital | G.Thilakavathi; Dr Prabhu Thilaak; Ms Shruthi Thilaak- Directors- White Lotus Books Pvt. Ltd<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |

I, G.Thilakavathi hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date:11.02.2019 Signature of publisher

# ஆல்பிரட் ஹிட்ச்காக் - பிரான்ஸிஸ் த்ரூபோ



தமிழில்:
என். ஜெகநாதன்

ஆல்பிரட் ஹிட்ச்காக்கை பிரென்ஞ்ச் வானொலிக்காக ஆகஸ்ட் 1962இல் பிரான்ஸிஸ் த்ரூபோ எடுத்த 25 பகுதிகளைக் கொண்ட நேர்காணலின் மொழிபெயர்ப்பு இது. திரைப்பட கலைஞர்கள் பங்குகொண்ட மிகச் சிறந்த உரையாடல்களில் ஒன்றாக இது உலகம் முழுதும் கொண்டாடப்படுகிறது.

அத்தியாயம் 16 / பகுதி 4

நான் இரண்டு மாதங்கள் கழித்து ஒரு கிறிஸ்மஸ் சமயத்தில் ஹிட்ச்காக்கை சந்திக்கப் போனேன். யுனிவர்சல் ஸ்டுடியோவின் பங்களா ஒன்றில் அவரை சந்தித்தேன். அந்த இடம் இருபது வருடங்களுக்கும் மேலாக ஹிட்ச்காக்கின் தயாரிப்பு நிறுவன அலுவலகமாகப் பயன்படுத்தப்பட்ட இடம். அவர் பீட்டர் போக்டனோவிச்சின் 'Nickelodeon' திரைப்படத்தை எனக்காக திரையிட்டார். பின்பு பாதியிலேயே நிறுத்திவிட்டு, அவசரமாக தன் அலுவலகத்திற்கு அழைத்துக்கொண்டு போனார். இரண்டு ஸ்டேக் சாப்பிட வரவழைத்தார். எந்த இடத்தில், எத்தகைய சுழலில் பதினான்கு வருடங்களுக்கு முன்னால பேச ஆரம்பித்தோமோ, அத்தகைய இடத்தில் அத்தகைய பேச்சையே மறுபடியும் தொடங்கினோம்.

நான் எப்போதும் எனக்கு புதிராகவே இருக்கும் 'சைக்கோ' படத்தைப் பற்றி அவரிடம் பேசினேன். ஜேனட் லெக் ஷவரில் குளிக்கும்போது கத்தியால் குத்திக் கொல்லப்படுவதற்கு முன்பாக, யார் கையில் கத்தியோடு அங்கு வருகிறார்கள் என்று ஆச்சர்யப்பட்டேன். அந்தோனி ஹாப்கின்ஸ் தலையில் விக் வைத்துக்கொண்டு வருகிறாரா, இல்லை யாராவது டான்சரா அல்லது ஒரு பெண்ணா, இல்லை இன்னும் யாராவதா? பின்புல ஒளிப்பதிவில் படமாக்கப்பட்டு, உருவம் யாரென்று அடையாளம் கண்டுகொள்ள முடியாத நிழலுருவமாகத் தோன்றும் இக்காட்சி நம்பகத்தன்மையற்றதா?

ஹிட்ச்காக், தாக்குவதற்காக வருபவர் விக் அணிந்த இளம் பெண். அதோடு அவர் அந்தக் காட்சி இரண்டு முறை படமாக்கப்பட்டது என்றும் சொன்னார். ஏனெனில், வெள்ளை வர்ணமான குளியலறைச் சுவற்றில் வெளிச்சம் பட்டு எதிரொளித்து, கொலை செய்பவரின் முகம் தெளிவாகதெரிந்ததால்,இரண்டாவது முறை முகம் தெளிவற்று இருக்கும்படி ஒளிப்பதிவு செய்யப்பட்டதாகச் சொன்னார்.

நாங்கள் ஹாலிவுட் பற்றி பொதுவாகப் பேசிக் கொண்டிருந்தோம். பாராமவுண்ட் ஸ்டுடியோவுக்கும் யுனிவர்சல் ஸ்டுடியோவுக்கும் இடையே இருந்த போட்டி மனப்பான்மை பற்றி பேச்சு திரும்பியது. 'கிங்காங்' படத்தை எடுக்க ஹிட்ச்காக்கிடம் இரு நிறுவனங்களுமே கேட்டுக் கொண்டிருந்தன. ஒன்று அவரை வேலைக்கு அழைத்தது; இன்னொன்று அவரை படத்தை எடுத்து தரச்சொல்லி, அதன் லாப நஷ்டங்களை அவரையே பார்த்துக்கொள்ளச் சொல்லியது. நேர்மையான, பிரபலமான மனிதரான ஹிட்ச்காக், தன் பலத்தை பிரயோகிக்கவே இல்லை. உலகில் முக்கியமான பெரிய நிறுவனம் ஒன்றின் ஐந்து பங்குதாரர்களில் ஒருவரும், லேவாசர்மேனின் நெருக்கமான நண்பரும் ஆலோசகருமான அவர், அந்த வாய்ப்பை ஏற்றுக்கொள்ளாமல் யுனிவர்சல் ஸ்டுடியோவின் வரவேற்பு அறையிலேயே, தான் படங்களை இயக்கி தயாரிக்கவே விரும்புபவன் என்று, அந்த வாய்ப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்.

சில வருடங்களுக்கு முன்னால் 'ஏர்போர்ட்' திரைப்படம் யுனிவர்சல் ஸ்டுடியோவின் கருவூலத்தை நிரப்பி யிருந்தது. தொடர்ந்து அதன் அடுத்த பாகங்களை எடுத்துக் கொண்டிருந்தது. நாங்கள் பேசிக்கொண்டிருந்த அலுவலகத்துக்குப் பக்கத்திலுள்ள அலுவலகங்களில் அதன் வேலைகள் நடந்து கொண்டிருந்தன. திரைப்படத்தின் மூன்றாம் பகுதியான, வானவீதி சாகஸங்கள் பற்றிய விவாதங்கள் நடந்த வண்ணமிருந்தன.





அதற்கு '747' என தலைப்பிட்டிருந்தனர். அதில் ஒரு காட்சி, ஒரு ஜம்போ ஜெட் விமானம் விபத்திற்குள்ளாகி தண்ணீரில் விழுவது. அந்தக் காட்சியை எடுக்க ஸ்டுடியோ அனுமதி வழங்கிவிட்டது. ஹிட்ச்காக அதனை ஏற்றுக்கொள்வாரா மாட்டாரா என்பது பற்றி அவர்கள் கவலைப்படவில்லை.

ஆனால், ஒரு என்ஜினியரிங் படித்திருந்த, கதை சொல்ல தெரிந்த ஹிட்ச்காக்கிற்கு சில நேர்மையான கேள்விகள் தோன்றின. 450 பயணிகள் விமானத்திலிருக்க அந்த விமானம் தண்ணீரில் விழுகிறது. விமானத்தின் தலைப் பகுதி காற்றுப் புகாவண்ணம், நீர் புகாவண்ணம் வடிவமைக்கப்பட்டது. எனவே, குறைந்தது சில மணி நேரமாவது அங்கு சுவாசிக்க காற்று இருக்கும். அவர்கள் தாங்கள் தப்பிக்க ஏதாவது ஏற்பாட்டைச் செய்துகொள்ள முடியும்.

ஸ்டுடியோ இன்னும் இரு இளம் படைப்பாளிகளை வேலைக்கு அமர்த்தி இந்தப் பிரச்சினையை தீர்க்கும்படி சொன்னது.

நான் ஹிட்ச்காக்கிடம் இதுபோல் முன்பு ஒருமுறை அவர் வாழ்வில் நிகழ்ந்த சம்பவம் ஒன்றை நினைவுபடுத்திச் சொன்னேன். 1939ஆம் ஆண்டு 'டைட்டானிக்' படம் இயக்குவது சமபந்தமாக அவருக்கும் தயாரிப்பாளர் செல்ஸ்னிக்கிற்கும் நடந்த பிரச்சினை அது. ஹிட்ச்காக 'டைட்டானிக்' படத்தை தவிர்த்துவிட்டுத்தான் 'ரெபெக்கா' படத்தினை எடுத்தார்.

நிகழ் காலத்தைப் பற்றிப் பேசும்போது ஹிட்ச்காக், தான் உண்மையிலேயே நிறைவோடு இருப்பதாகவும் அவரது ஐம்பத்து நான்காவது படத்திற்கான கதையை தேர்ந்தெடுத்துவிட்டதாகவும் சொன்னார். அவர் எடுக்க வேண்டாம் என்று கைவிட்டிருந்த 'Unknown Man No 89' என்ற எல்மோர் லியோனார்டு நாவலின் திரையாக்க உரிமையை அவர் ஏற்கனவே பெற்றிருந்தார், அதோடு ஒரே மாதிரியான கதைக்களத்தைக் கொண்டிருந்த இரண்டு நாவல்களையும் அவர் வாங்கியிருந்தார். முதல் கதை துப்பறிவுப் புலனாய்வுக் கதை The Springing Of George Blake என்ற சீன் பௌள்கே எழுதிய நாவல். அதோடு ரொனால்ட் கிர்க்பிரைட் எழுதிய The Short Night என்ற அதே வகைக் கதை.



Frenzy

கிழக்கு ஜெர்மனி, மேற்கு ஜெர்மனி இரண்டிலும் ஒற்றனாக இருந்த George Blake என்ற ஒரே ஆளைப் பற்றிய கதை. ரஷ்யாவிற்கு உளவு பார்த்ததற்காக அவன் 42 ஆண்டுகள் சிறைத் தண்டணை விதிக்கப்படுகிறான். வும்வுட் சிறையிலிருந்து தன் ஐரீஸ் சிறை சகாக்களுடன், ரஷ்ய உளவுத்துறை ஏற்பாடு செய்திருந்த ஆட்களின் உதவியால் தப்பித்து, ஷான் போர்க் என்ற தோழனுடன் சோவியத் ரகசிய அமைப்பால் ரஷ்யாவிற்கு அனுப்பி வைக்கப்படும் வரை, லண்டனில் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறான்.

ஆனால், வீட்டு நினைப்பிலேயே இருந்த ஷான் போர்க் அயர்லாந்து திரும்புகிறான். அடுத்த ஆண்டிலேயே அவனது அனுபவங்களை எழுதுகிறான் அதுதான் The Short Night என்ற நாவலுக்கான அடிப்படை. பிரிட்டீஷ் அரசு ஷான்போர்க்கை தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கோரியது. ஆனால், அந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது. பிளேக் என்ற அவர்களுடன் தப்பித்த இளைஞன் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்குப் பயணம் செய்கிறான். அவன் அம்மாவிற்கு எழுதிய கடிதங்களில் அவனது நிலை பற்றிய தகவல்கள் கிடைக்கின்றன. நிலை இல்லாத மனம் அவனுடையது. அவன் மனைவியோடு சண்டையிட்டுக் கொண்டேயிருந்ததால் அவளை அவன் விவாகரத்து செய்கிறான். சிறையிலிருந்து தப்பித்து வந்தபின் மீண்டும் அவளை மணம்புரிந்து கொள்கிறான்.

ஹிட்ச்காக் இந்தக் கதையை நீண்ட வருடங்களாக மனதில் வைத்திருந்தார். 1970களின் ஆரம்பத்தில் அவர் காதரின் டொனாவே, வாடர் மதாவ் ஆகியோரை பிரதான கதா பாத்திரங்களுக்கு அழைத்தார். அதன்பின் அதன் முக்கிய காட்சிகளை பின்லாந்தில் எடுக்க முடிவு செய்தார். ஷான் கானரியையும் லிவ் வுல்மானையும் ஆழ்ந்து யோசித்து முடிவு செய்தார்.

காதல் கதையாக ஆரம்பித்து, ஓட்டம், துரத்தல், தப்பித்தல் வகைக் கதையாக 'நொடோரியஸ்' படம் போல எடுக்க திட்டமிட்டார். புதிய திரைக்கதையை எழுத ஆரம்பிக்கும் போது 'நொடோரியஸ்' கதையே பலமுறை உதாரணமாகக் காட்டப்பட்டது என்றார்.

அவர் The Short Night கதையை இப்படி வடிவமைத்தார். ஒரு பிரிட்டீஷ் ஒற்றன், ரஷ்யாவிற்காக உளவு பார்த்தவன், லண்டன் சிறை யிலிருந்து தப்பிக்கிறான். அமெரிக்க உளவுத்துறை அவனது திட்டத்தை அறிகிறது. பின்லாந்து கானகப் பகுதியிலிருக்கும் அவன் தன் மனைவி மற்றும் குழந்தையை அழைத்துக்கொண்டு ரஷ்யாவிற்கு செல்லப் போகிறான் என்பதே அது. அமெரிக்க உளவாளி ஒருவன் பின்லாந்துக்கு அனுப்பப்பட்டு, அவன் தன் மனைவியைப் பார்க்க வரும்போது அவனைக் கொல்வதற்காக காத்திருக்கிறான். அப்படி காத்திருக்கும் போது, அமெரிக்க உளவாளிக்கும் ஒற்றனின் மனைவிக்கும் காதல் அரும்புகிறது. பல காரணங்களால் அவன், தான் எதற்காக வந்தேன் என்ற காரணத்தை அவளிடம் மறைக்கிறான். 'நொடோரியஸ்' படம் போலவே காதலுக்கும் கடமைக்குமான போராட்டமாக அது இருக்கிறது. கடைசியில் ரஷ்ய பின்லாந்து எல்லையில், ரயிலில், மனித வேட்டை, துரத்தல் என்று நகரும் இந்தப் படம் சுபமான முடிவுடன் இருந்தது.

ஏர்னஸ்ட் லெஹ்மன் என்ற திரைக்கதாசிரியர். 'நார்த் பை நார்த்வெஸ்ட்','பேமிலிபிளாட்' படங்களுக்கு எழுதியவர். இவர் இந்தக் கதைக்கு பல்வேறு வடிவ திரைக்கதையை எழுதினார். ஆனால், எந்த வடிவமும் ஹிட்ச்காக்கிற்குப் பிடிக்கவில்லை.

அப்போது அவரது வாழ்வை சுழற்றிப் போட்ட சூழல் உருவானது. 'பிரென்ஸி' படப்பிடிப்பு முடியும்போது அவரது மனைவி அல்மா முதலாவது ஸ்ட்ரோக்கில் நினைவிழந்தார். இருபத்து நான்கு மணி நேரமும் யாராவது உடனிருந்து பார்த்துக்கொள்ள வேண்டிய சூழலில் இருந்தார். இரண்டு மாதங்கள் மனைவியைப் பார்க்காமல் ஹிட்காக் பின்லாந்துக்கு வருவார் என்பதை யாரும் கற்பனை செய்துகூடப் பார்க்கவில்லை. அதோடு அப்போதுதான் ஆரம்பமாகி யிருந்த அவரது முடக்கு வாதம் அவரை அதிகம் நகரவிடாமல் செய்தது.

திரைக்கதையில் எழுதப்பட்டிருந்த, பின்லாந்தில் நிகழும் சம்பவங்களை இரண்டாவது யூனிட்தான் படம் பிடித்தது. ஹிட்ச்காக் அறைக்குள் நிகழும் காட்சிகளை ஸ்டுடியோவில் இயக்கினார். நல்லவேளையாக 'பிரென்ஸி' படப்பிடிப்பிற்க்கு முன்னதாக ஹிட்ச்காக் பின்லாந்து சென்று படப்பிடிப்பிற்கான இடங்களை தேர்ந்தெடுத்து திரும்பியிருந்தார். 1978இன் இறுதியில் அவர் படப்பிடிப்பைத் தொடங்க இரண்டு முக்கியமான முடிவுகளை எடுத்தார். நார்மன் லாய்ட் என்ற, அவரோடு முப்பது வருடங்களுக்கும் மேலாக பணியாற்றியவரை பின்லாந்து படப்பிடிப்புக்கு அனுப்பினார். இன்னொன்று எர்னஸ்ட் லேஹ்மேனால் தாமதமாகிக் கொண்டிருந்த திரைக்கதையை எழுத டேவிட்பிரீமேன் என்ற இளம் திரைக்கதாசிரியர் நியமிக்கப்பட்டார்.

(தொடரும்)

என். ஜெகநாதன் <Jaganathanvr4@gmail.com>

# சவம் எழுந்த கதை



பா.அ. ஜயகரன்

*தை மாதம், ஸ்ரீ மன்மத வருசம் கலியுகம் 5116, பூரட்டாதி நட்சத்திரமும் வரியான யோகமும் கூடிய சுப வேளை, பிற்பகல் 4:15 மணிக்கு இந்தக் கதையை மீள எழுதத் தொடங்குவதாக கொள்வோம்.*

அப்படியொன்றுமில்லை. எனது நீண்டநாள் நண்பன் யோகனை சந்திக்க கனடாவிலிருந்து ஜேர்மனி வந்திருக்கிறேன். அவனுடன் இரவு முழுவதும் இருந்ததினால் நானும் அரை சாத்திரியாக மாறிவிட்டேன். நாள் நட்சத்திரம் பார்க்காமல், கதையை எழுத முற்பட்டபோது ஒரு துண்டோடு நின்றுபோனது. அதற்கான காரணம் மரணயோகத்தில் கதையை எழுத முற்பட்டதாக இருக்கலாம். ஒரு துண்டை கதையாக்கக்கூடிய கூட்டம் என்னைச் சுற்றி இல்லாததும் இன்னொரு காரணமாக இருக்கலாம். இன்னும் பல காரணங்கள் இருக்கக்கூடும். பேனாவை எடுத்த கிரக நிலை, முதல் எழுத்து பதிந்த கிரக நிலை போன்றவற்றை வைத்து கணித்தால் நிச்சயமாக பல காரணங்கள் முன்னிற்கும். நானும் நீங்களும் ஒரே கிரகத்தில் இருப்பதால் மட்டும் இந்தக் கதையை வாசிக்க முடியாது. ஏழரையின் முதல் கூறில் உள்ளவர்களும் கடைக் கூறில் உள்ளவர்களும் மட்டுமே இந்தக் கதையை வாசிக்கும் பாக்கியம் உண்டாகலாம்.

வியாழ மாற்றம் உங்களுக்கு எப்படி? நல்ல கதையை வாசிக்கும் பாக்கியம் உண்டா? குரு எந்த இடத்தில் உள்ளார்?

இராகு காலத்தில் வீட்டுக்குள்ள வரக்கூடாது என்று யோகன் கட்டளை யிட்டான். அவன் இருக்கும் இடத்துக்கு இராகு காலத்தில் புகையிரதம் போய் நின்றது. இராகு காலத்திலும் ஜேர்மனியில் புகையிரதம் ஓடுவது ஆச்சரியமானதுதான்.

"மச்சான் வந்திட்டன்." அவனுக்கு தொலைபேசியில் அழைத்தேன்.

"மச்சான் குறை நினைக்காதே. இப்ப இராகு காலம். வீட்டுக்குள்ள விடமாட்டன். ஐஞ்சு மணிக்குப் பிறகு வா" என்று பதிலளித்தான்.

ஒரு மணிநேரமும் சொச்சத்தையும் அருகிலிருந்த 'பாரில்' கழிக்கலாம் என்று அதற்குள் நுழைந்தேன். மரணயோகம், இராகு காலத்திலும் ஜேர்மன் 'பியர்' நுரைத்தபடியே இருந்தது. அருகிலிருந்தவன் சரையொன்றை விரித்தான். அவனுடன் வெளியே சென்றேன். சிவயோகம் எட்டும் வரையும் புகைத்தபடியே இருந்தேன்.

"டேய் எங்கையடா நிற்கிறாய் மூன்று மணிநேரமாய் உன்னைப் பார்த்துக்கொண்டு நிற்கிறன்." யோகன் குளறினான். சித்தயோகம் கூடியபோது அவனின் கதவைத் தட்டினேன்.

"நாயே பார்த்தியே அப்பவே சொன்னன். கதையை தேடிக்கொண்டு பரதேசியாய் ஊர் ஊராய்த் திரிகிறாய். எது உள்ள வருகுதோ அதுதான் வெளிய போகும். அது இரண்டையும் வடிவாக கவனித்துக் கொள். நல்லது நடக்கும்" என்று யோகன் சாத்திரியார் சொன்னான்.

இருபத்தைந்து வருடங்களுக்கு பின்னராக அவனைச் சந்தித்திருக்கிறேன். நாள், நட்சத்திரம் பார்க்காமல் சாப்பிடுவதுமில்லை, குதம் கழுவுவதில்லையென முடிவெடுத்துவிட்டேன். சுபம்!

யோகன் சாத்திரியாராக உருமாற எத்தனித்துக் கொண்டிருந்தான். அதுக்கு காரணம் எங்கள் அறைக்கு வந்து சேர்ந்த ஐயர் பொடியன் சிவம்தான். பன்றியும் உருளைக் கிழங்குமாய் தின்று கொழுத்தான் சிவம். ஹம்பேர்க்கில் யாரோ ஐயர் வேண்டும் என்று தேடியபோதுதான் சிவம் கையை உயர்த்தினான். அதுவரை ஒருவருக்கும் இவன் ஐயன் என்று தெரியாது. எங்கள் அறையைவிட்டு போன பின்னர் அவன் மீண்டும் சிவசர்மா எனும் ஐயன் ஆனான். அவனுக்கு ஊரில் இருந்து வந்த வாக்கிய பஞ்சாங்கத்தில் இருந்து நாள் பார்க்கப் பழகி கிரக நிலையை கணிக்கிற அளவுக்கு வளர்ந்திட்டான் யோகன். அவனுக்கு கலியாணம் பேசி பெட்டை வரப்போகிறது என்றவுடன் மெல்ல நண்பர்களை குறைத்து பொறுப்புள்ள கணவனாக மாற முயற்சித்துக்கொண்டிருந்தான். எங்கள்

அறைக்கு இரண்டு பூட்டுக்கள் போட்டான். பழைய பொருட்களை அகற்றினான். புதிதாய் தளபாடங்களை வாங்கிப் போட்டான். கனகும் புதிய அறைக்கு போய்விட்டான். மிஞ்சியது நான்தான்.

"வெளிநாட்டுப் பயணம் சாத்தியப்படுது" என்று எனக்கு பலன் சொன்னான். ஒரு கட்டைத் தொடர்பைத் தந்தான். அங்கிருந்து ஒல்லாந்து போய் வரும்போது கட்டையோடு வந்தேன். பிறகு பிரான்ஸ்சுக்கு டொலர் பெட்டி ஒன்றை மாற்றினேன். இதெல்லாம் சாத்திரி யின்ட தொடுசல்தான். கையில் நல்ல காசு புளங்கியது. சாத்திரிக்கும் தட்டில் காசை வைத்துவிட்டு கள்ளப் புத்தகத்தில் கனடா வந்திறங்கினேன். இப்போ யோகன் பேரப்பிள்ளைகளுடன் இருக்கிறான். முள்ளிவாய்க்கால் வரையும் என்னை எதிரியாகவே பார்த்தான். இருவருக்கும் அரசியல் இல்லாத பிரச்சினை. நான் அவனைச் சந்திக்க விரும்பும் போதெல்லாம் ராகுகாலமும் என்னைத் தொடர்ந்த வண்ணம் உள்ளதாக அவன் சொன்னான். 'தனது பழையதுகளை எடுத்துவிட்டு நாறடிச்சுப் போடுவான்' என்ற பயம் அவனுக்குள் இருந்திருக்கும். கோயில் அறங்காவலர், சோதிடம் என்று அறியப்படும் முக்கிய புள்ளியாக இப்போ மாறியிருக்கிறான்.

"வியாழ மாற்றம் உங்களுக்கு எப்படி?" என்று உள்ளூர் தொலைக்காட்சியில் நிகழ்ச்சி செய்யுமளவுக்கு வளர்ந்திருக்கிறான். அதற்கு யோகனின் மனைவி பிடித்த விரதங்கள் காரணமாய் இருக்கலாம்.

கனகு, ஹம்பேர்க்கில் கடையுடன் இருக்கிறான். இந்தியாவில் இருந்து ஆட்களைக் கூப்பிட்டு நிகழ்ச்சி நடத்தும் முக்கிய பிரமுகர். இயக்கத்தினுடைய காசு இவனிடம் நிறைய புளங்குகிறது என மக்கள் கதைக்கிறார்கள். "தலைவர் திரும்பி வரேக்க குடுக்கிறதெக்கென்டு கோடிக்கணக்கில வைத்துக்கொண்டு இருக்கிறான்" என்றும் சொல்கிறார்கள். இயக்கத்துக்கு இன்னமும் விசுவாசமாய் இருக்கிறான். கார்த்திகை மாசம் தொடங்கினால் கடையில் இயக்கப் பாட்டு மட்டுமே ஒலிக்கும். கார்த்திகை 26 கடை மூடியிருக்கும். யோகன், கனகு உறவு இன்னமும் அப்படியேயிருந்தது. தினசரி சந்திப்பு, குடுக்கல் வாங்கல், எல்லாம் வழமைபோலவே. இயக்கக் காசு கோயில் மூலஸ்தானத்திலும் இருக்கிறது. கோயிலும் இயக்கத்தின் மூலதனம்தான். யோகன் கோயில் பொறுப்பாளனாய் இருக்கிறான். சிவசர்மாதான் கோயிலின் குருக்கள். கடவுளின் அருள் ஐயருக்கும் பொறுப்பாளருக்கும் நிறையவே கிடைக்கிறது. "தலைவர் இருக்கிறார். வரவேண்டிய நேரத்தில் மீண்டும் வருவார்" என்று நெடுமாறன் ஐயா சொல்வதை மற்றவர்களுக்கும் கூறியவாறு இருக்கிறார்கள்.

கிளாசியோ கப்பல் ஹம்பேர்க்கில் நங்கூரம் இடும்போது இரண்டு சிப்பந்திகள் மாயமாய் மறையப் போகும் விடயம் கேப்டனுக்குத் தெரியாது. யோகனும் கனகும் கப்பலில் இருந்து ஹம்பேர்க்குள்ளே பாய்ந்தார்கள். அப்போது மேற்கு ஜேர்மனி 1982ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ்ஸை கொண்டாடிக் கொண்டிருந்தது. ஜேர்மனிக்கு வந்த ஆரம்ப தமிழ் குடி இவர்கள். யோகன், கனகு என்றால் ஹம்பேர்க்கில் தெரியாதோர் இல்லை. அப்படித்தான் அவர்கள் சொல்லிக்கொள்கிறார்கள். இவர்கள் அறைதான் எனக்கும் வாழ்வு தந்தது.

அதுவொரு திறந்துவிடப்பட்ட அறை. அல்லது 24மணி நேரமும் திறந்திருக்கும் பார் என்றும் சொல்லலாம். வருவோர்கள் ஏதாவது போத்தலுடன் வருவார்கள். குடிக்கு பஞ்சமில்லை. சிலவேளை அங்கு நடக்கும் சிரமதானத்தால் சமையல், சாப்பாட்டு பாத்திரங்கள் கழுவப்படும். முகம் தெரியாத உபயகாரினால் அரிசி, உருளைக்கிழங்கு, பன்றி இறைச்சி, முட்டை, கரட்டும் அறைக்கு வந்து சேரும். கனகும் பொருட்களை வாங்கிப் போடுவான். யாரும் சமைக்கலாம். சட்டிக்குள் சோறும், அவித்த உருளைக் கிழங்கும், பன்றிக் குளம்பும், கரட் சம்பலும், தயிரும் தினசரி இருக்கும். காலை உணவுக்கு பாணும், பட்டர், ஜாமும் இருக்கும். முக்கிய நாட்களில் குதிரையின் குறி என அறிமுகப்படுத்தப்பட்ட 'சொஜேஸ்' பொரியலும் கிழங்குப் பொரியலும் கிடைக்கும். கட்டை அடிக்கிறவன், 'போடர்' செய்யிறவன், கறுப்பு காசு ஓட்டுறவன் என்று எல்லோரும் வந்து போகும் இடமாயும் அது இருந்தது. யாரும் எங்கும் படுத்தொழும்பிப் போகலாம். செஞ்சிலுவைச் சங்கம் கொடுத்த போர்வைகளும் நித்திரைப் பைகளும் நிறையவேயிருந்தன.

நான் வந்திறங்கிய புதிதில் நாய்க்கு போடும் பிஸ்கட்டை 'நாய் பிராண்ட்' பிஸ்கட் என்று அறிமுகப்படுத்தி சாப்பிடப் பண்ணியவர்கள், அம்சடாம் விருந்தாளிகள் கொண்டுவரும் கஞ் சாவை புகைக்க பண்ணியவர்கள், ஜேர்மன் பெட்டைகளுக்கு யோனி பின்பக்கத்தில் என்று என்னை ஆராயவிட்டவர்கள் யோகனும் கனகும்தான். நாய்கள்!

நாங்கள் உயர்தர பரீட்சை எழுதிவிட்டு முடிபுக்காக காத்திருந்த காலத்தில் யோகன் ஒரு வெளிகள வேலையோடு வந்தான். யாழ் ராணி தியேட்டரில் இரவு காட்சி முடிந்த பின்னர் மூத்திர ஒழுங்கைக்குள் புல்லுக் குளத்திற்கு அண்டையாக நின்ற ஒருத்தியோடு யோகன் பேரம் பேசினான். எங்கள் வெளிக்கள வேலைக் குழுவில் ஏழு பேர் இருந்தோம். "கோட்டை முனியப்பரை தரிசிக்கலாம் வாங்கோ" என வெளிக்கள குழுவை அழைத்துப் போனாள் அந்த சிங்காரி. கோட்டை முனியப்பருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு ஒவ்வொருவராக கோயிலின் பின் பக்கம் கோட்டை மதிலோடு போய் வந்தோம். அவளும் ஒவ்வொன்றையும் பக்குவமாகக் காட்டி எங்களிடம் காசைப் பிடுங்கிக்கொண்டிருந்தாள்.

"இவன் ஒரு வெக்கறை" என்று அவளுக்கு கூறியவாறு யோகன் திரும்பவும் என்னோடு வந்தான்.

"அக்கா வெட்கப்படாமல் காட்டுங்கோ" என்று யோகன் சொன்னான்.

அப்போதுதான் அவள் வெட்கத்தை துறந்தாளோ தெரியாது. தனது முழுச் சட்டையை முழுக்கவே கழட்டி எங்கள் முன்னே நின்றாள். யாழ் கோட்டை



அவள் பின்னேயிருந்தது. அப்போதுதான் கோட்டையே அர்த்தம் பெற்றது. முனியப்பர் கோயிலுக்கும் கோட்டைக்கும் இடையில் இருந்த வெளிச்சத்தில் அனைத்தும் முன்னுக்கே இருந்தன. என்னைவிட இந்த விடயத்தில் யோகன் சிங்கன்தான். நம்பாமல் இருக்க முடியாது. புதிர்!

ஹாம்பேர்க்கில் துகிலுரி நடனத்திற்கு எங்கள் கூட்டம் போனபோது அங்குள்ள நடனதாரகைகள் உற்சாகத்தோடு இருந்தார்கள். எம்மோடு இரண்டு கட்டை மற்றும் காசு ஓட்டக்காரரும் இருந்தார்கள். அவர்கள் எறியும் காசை ஜேர்மன்காரரிடம் எதிர்பார்க்க முடியாது. யோகன் ஒருத்தியை அழைத்து அவள் காதுக்குள் எதையோ சொன்னான். பின்னர் என்னைப் பார்த்து கண்ணடித்தான். அவள் என்னருகே வந்தாள். மார்பின் நுனியும் யோனியும் மறைக்குமளவு ஒரு உடை. காலில் குதி அணிந்திருந்தாள். இந்தக் கோலத்தில் ஒரு பெண்ணை முதற் தடவையாகப் பார்க்கிறேன். குளிருக்காக அணிந்திருந்த தடித்த உடைகளுக்குள் எனது தேகம் படபடக்கத் தொடங்கியது. East end boys and west end Girls என்ற பாடல் ஒலிபரப்பானது. எனது மேசைக்கு முன்னால் இருந்த கம்பித் தூணை துணைக்கு அழைத்து ஆடத்தொடங்கினாள். அவளது உடல் எல்லாப் பக்கமும் வளைந்தது. கால்கள் எல்லாக் கோணங்களிலும் விரிந்து கொடுத்தது.

நல்லை ஆதியினத்தில் யோகாசனம் கற்றிருக்கிறேன். யோகா அக்காவும் காலையும் உடலையும் இவ்வாறு வளைக்கக் கூடிய வல்லமை பொருந்தியவர். யோகாசனத்தை ஆடையில்லாமல் கம்பியின் துணையுடன் செய்யக்கூடிய வல்லமை இவளுக்கு இருந்தது. கம்பியைப் பிடித்துக்கொண்டு ஒற்றைக் காலை நிலைக்குத்தாகத் தூக்கினாள். யோனியை மறைத்திருக்கும் துண்டு பறந்துவிடுமோ என்ற அச்சம் அவளுக்கும் இருக்கவில்லை. மற்றைக் காலைத் தூக்கி தூணைப் பற்றிக்கொண்டு சுற்றினாள். உயர்தரத்தில் படித்த மையவிசையை இப்போது உணரத் தொடங்கினேன். கால்களால் தூணைப் பிடித்துக்கொண்டு கைகளை விடுத்து சுற்றினாள். அப்போது அவளது மார்புகளை மறைத்திருந்த துண்டை கழட்டி என் மீது விட்டெறிந்தாள். அது எனது முகத்தில் வந்து வீழ்ந்தது. அதைத் தூக்கி அவளது மேசையில் பக்குவமாகப் வைத்தேன். ஒரு வெள்ளைக்காரியின் மார்பைப் பார்த்த கிறக்கத்தில் இருந்தேன். நான் முன்பு இவ்வளவு தெளிவாக பார்த்தது கிடையாது. ஒளியில், மாறும் நிறத்தில் அவள் எனக்காக தன் மார்புகளை காட்சிப்படுத்திக் கொண்டிருந்தாள். பாடலின் தாளத் திலிருந்து அவளது உடல் பிரியவில்லை. East end boys என்று வரும்போது தனது யோணி மீது கிடந்த துண்டையும் துறந்தாள். அதுவும் எனது முகத்தில் வந்து வீழ்ந்தது. அப்போதும் அவளது நடனம் தாளத் திலிருந்து குழம்பவில்லை. மோகத்தின் தாளத்தில் நான் இருந்தேன். அவளது யோணி எனது முகத்தின் முன்னே

வந்துநின்றது. உலகப்பந்தின் அச்சில் விலகல் உண்டான தருணம் இதுவாகத்தான் இருக்கும். நான் கண்களை இறுக மூடினேன். உடல் காமத்தின் விறைப்பில் இருந்தது. பாடல் முடிய முன்பு நான் கழிவறை நோக்கி ஓடவேண்டி வந்தது. கனகும் யோகனும் சிரித்தார்கள். இன்று அறையில் இந்தக் கதைதான் ஓடப்போகிறது. எங்களுடன் பெண்கள் மிகவும் நெருங்கியிருப்பதை அங்கிருந்த ஜேர்மன்காரர்கள் அவ்வளவாக விரும்பவில்லை என்பதை அவர்களின் முகங்களும் பேச்சுகளும் புரிய வைத்தன.

"அகதிகள் எங்கட சரக்குகளை ஓட்டுறாங்கள்." ஒரு வெள்ளையன் சொன்னான்.

"கனகு போய் காரை ஸ்டாட் பண்ணு. முன்னுக்கு நிற்கிற வெள்ளை நாய்க்கு சாத்திப்போட்டு வாறன்" என்று கட்டை ரவி நின்றான்.

அவனுக்குப் பிரச்சினை இல்லை. ஐரோப்பாவில் எல்லா நாடுகளிலும் பதிவு இருந்தது. எங்கள் நிலை அப்பிடியில்லை.

"வீண் பிரச்சினை அனாவை ஏத்து" என்றான் யோகன்.

ஆடல் அழகி அனா எங்கள் காரில் இருந்தாள். அவளுக்கு எப்போதும் நன்றியுடையவனாக இருக்கவேண்டும். அவள் இல்லாவிட்டால் எட்டாவது அதிசயப் புதிரை நான் அவிழ்த்து இருக்கமுடியாது. யாழ்ப்பாணத்து தாமரையும் ஹம்பேர்க் ரோசாவும் பிரம்மா வைத்த இடத்திலேயே இருந்தன. எங்கள் அறையின் மூலை முடுக்கெல்லாம் அவளுக்கு தெரிந்திருந்தது. அவள் எனக்கு முற்பட்ட காலத்து காரிகையாக்கும். குசினிக்குள் போய் சோற்றையும் பன்றிக் குளம்பையும் எடுத்துச் சாப்பிட்டாள். கண்ணிமைக்கும் நேரத்துக்குள் அறைக்குள் போய் தனது உடைகளைக் களைந்துவிட்டு எனது சாரத்தை குறுக்குக்கட்டு கட்டிக்கொண்டு வந்து குந்தி கஞ் சாவை இழுக்கத் தொடங்கினாள். மப்பு ஏறினாள் கனகுக்கு சோகப் பாட்டுத்தான் தேவைப்படும். நேயர் விருப்பத்தில் அவனுக்கான சோகப் பாட்டைப் பாடினால்தான் அன்றைய நிகழ்ச்சியை மேற்கொண்டு நடத்த முடியும்.

"உந்த நாயின்ட பாட்டை முதலில பாடுங்கடா" என்றான் யோகன்.

"அவள் பறந்து போனாளே" என்று ஈழத்து சீர்காழி பாடத் தொடங்கினான். அனா எழுந்து ஆடினாள். எல்லோருக்கும் மதிப்பளிக்கும் முகமாக எல்லாப் பாட்டுக்கும் ஆடினாள். தொடர்ந்து ஆடியிருந்தாள் 'துகிலுரியாமல்' ஆடியமைக்காக அவள் கின்னஸ் புத்தகத்தில் இடம்பெற்றிருக்க முடியும். யோகனும் கனகும் கப்பல் நங்கூரம் இடும் இடமெல்லாம் பாய்ந்து பழகியவர்கள். ஆதலால், அவளது ஆட்டம் இடையிடையே குழம்பிப் போனது. எனது சாரத்தை என்ன செய்வதென யோசித்துக்கொண்டிருந்தேன். பாதகர்கள்!

"டேய் கனகு போயிட்டான். படுத்த படுக்கையிலை போய்ச் சேர்ந்திட்டான்" என்று யோகன் தொலைபேசியில் அழுதான். போன மாசம்தான் நாங்கள் இருபத்தைந்து வருடத்துக்குப் பிறகு ஒன்றாய் இருந்து கதைத்தோம். அது நீண்ட இரவு. மகிழ்வாய் இருந்தது. கடந்த காலத்தை ஒவ்வொன்றாய் மீட்டுக் கொண்டிருந்தோம். 'வட்டுக்கோட்டையிலிருந்து முள்ளிவாய்க்கால் வரை' அலசி ஆராய்ந்தோம்.

"டேய் இந்த முறை வியாழ மாற்றம் தலைவருக்கு அவ்வளவு நல்லாய் இல்லையென்று நான் கனகனிட்ட சொன்னனான். கனகனிட்ட கேள்" என்றான் யோகன். கனகனும் ஆம்மென்று தலையாட்டியவாறு, "தலைமையும் கனக்க தவறுகளை விட்டுட்டு" என்றான்.

தனது சோதிடம் பலித்ததென்ற பெருமையில் இருந்தான் யோகன். கனகன் விசுவாசி. நானறிய பல வழிகளில் உழைத்த காசுகளை இயக்கத்துக்கு கொடுத்தவன். அதையவன் பீற்றியது கிடையாது.

"மச்சான் நான் இப்ப நல்லாய் நொந்து போனன். சனம் நான் இயக்கத்தின்ட காசை வைச்சு ஓட்டுறன் என்டு நினைக்கினம். இயக்கம்தான் எனக்கு கடன்" என்றான் கனகு.

நிச்சயமாக அது பொய்யாக இருக்காது. எமது அறை ஆயிரக்கணக்கில் ஆட்களை வரவேற்று அனுப்பி யிருக்கிறது. நாம் ஒரு நாளும் மனம் துவண்டது கிடையாது. எத்தனை பேரை 'பார்டரில்' கொண்டு போய் மற்றய நாடுகளில் விட்டிருப்போம். எதுவித எதிர்பார்ப்புமற்ற உபகாரங்களை இப்போது யார் செய்வார்கள். எங்கள் அறைக்கு வந்தவர்கள் எவரும் பசியோடு திரும்பியதில்லை. கனகன் எப்போதும் சாப்பாட்டு சாமான்கள் வாங்கிப் போட்டபடி யிருப்பான். எங்கள் அறைக்கு வந்த எவரும் கனகனை மறக்க முடியாது.

யோகனின் முகம் இருண்டிருந்தது. நாற்பது ஆண்டுகளுக்கு மேற்பட்ட நெருங்கிய உறவு. பஞ்சாங்கத்தை எடுத்துப் பார்த்தான். பஞ்சமி திதி அவிட்ட நட்சத்திரம் என இருந்தது. அவனின் முகம் மேலும் இருண்டது. அவன் ஒருவரோடும் பேசவில்லை. இறுதிக் கிரியைகளுக்கான வேலைகளை முன்னின்று செய்தான். அவன் முகம் விறைத்து பேச மறந்து திரிந்தான். நண்பனின் பிரிவு அவனை உள்ளூர கொல்வதாக அனைவரும் நினைத்துக் கொண்டோம். அவிட்டம் நட்சத்திரம் பஞ்சமி திதி சாவென்பது சாதாரணமான விடயம் இல்லை. அது அவனுக்குத் தெரியும். எதைச் செய்துகொண்டு நின்றாலும் பஞ்சமி அவனை இடைநிறுத்தியபடியே இருந்தது. பஞ்சமி!

"இதைக் கேள். அவிட்ட நாளில் இறந்தவர்களின் ஆன்மா பூலோகத்திற்கும் செல்லாமல் மண்ணுலகத்திலும் இல்லாமல் தனித்து அல்லல்படும். தனித்து திரியும் ஆன்மா தனக்கு துணை தேடி அலையும். தாங்கள் விரும்பிய உறவினர்களை, நண்பர்களை தங்களோடு அழைக்க முயற்சிக்கும். தங்களின் நிராசைகளை, வெறியை, கோபங்களை வெளிக்காட்ட முயற்சிக்கும். பற்பல இன்னல்களையும் மரணங்களையும் ஏற்படுத்தும்." கணினியிலிருந்து மனைவிக்கு வாசித்து காட்டினான் யோகன்.



“நான் சொல்லேக்க பல்லிளிச்சாய். பார்த்தியே தவத்தான் அவிட்டத்திலதான் போனவன். அவனோட ஐந்து பேரைக் கொண்டு போயிற்றான். பெரியவை சொல்லேக்க கேட்க வேணும்.” மனைவியோடு தன்னை நிறுவினான் யோகன். அவிட்டம்!

அவிட்டம், பஞ்சமி அவனைக் குடைந்தபடி யிருந்தது. கனகு அவிட்டம், பஞ்சமியில போயிட்டான். அவன் தன்னோடு கூட்டிக்கொண்டு போகக்கூடிய முக்கியமானவர்களில் யோகனும் இருப்பான்.

அந்த மண்டபத்தில்தான் தமிழர்களின் பெரும்பாலான மரணச் சடங்குகள் நடைபெறும். அங்கு நடக்கும் தமிழர் மரணச் சடங்குகளை வழி நடத்தும் முக்கிய நபர் யோகன்தான். அந்த மண்டபத்திற்கு யோகன் வருகிறான் என்றால் நிர்வாகிகள் தங்கள் பொறுப்பை அவனிடம் கொடுத்துவிட்டு தள்ளியிருந்து விடுவார்கள். பேளையைத் தூக்கி காரில் ஏற்றவும் பின்னர் உலைக்குள் தள்ளவும் மட்டும் உள்ளே வருவார்கள்.

“மச்சான் வந்திட்டியே போயிட்டான் எங்கட கனகன்” என்று என்னைக் கட்டிப்பிடித்து அழுதான்.

“மச்சான் தலைவர் இருந்திருந்தால் மாமனிதர் பட்டம் கொடுத்திருப்பார்” என்றான்.

எனக்கு அழுகையை கட்டுப்படுத்த முடியவில்லை. கூட்டம் வந்து கொண்டேயிருந்தது. மண்டபம் நிறைந்து வழிந்தது. அவனிடம் எத்தனையாயிரம் பேர் உதவி பெற்றிருப்பார்கள். அவன் உண்மையில் மாமனிதன்தான். யார் எவரென்றில்லை அறைக்கு அழைத்து வந்து உதவி செய்வான். உதவி செய்யாவிட்டால் அவன் முன்பே செத்திருக்கக்கூடும். மாமனிதன்!

“கடசியாய் பார்க்கிற ஆட்கள் பாருங்கோ, எரிக்கிற இடத்தில பெட்டி திறக்க மாட்டம்” என்று இறுதியாக யோகன் சொல்லி முடித்தான்.

பேளை ஊர்தியில் ஏற்றப்பட்டு பவனி தொடங்கியது. எரிக்கும் இடம் இங்கிருந்து எழுபது கிலோமீற்றர் தொலைவில் இருந்தது. பேளையை தாங்கிய ஊர்திக்குப் பின்னால் நூற்றுக்கும் மேற்பட்ட வாகனங்கள் வந்தன. யோகன் முன்னராகவே எரிக்கும் இடத்துக்கு போய் அங்குள்ள வேலைகளைக் கவனிக்க புறப்பட்டுவிட்டான்.

பெருந்தெருவில் இருபது கிலோ மீற்றர் தூரத்தை கடந்தபோது அமரர் ஊர்திக்குள் படபடக்கும் சத்தம் கேட்கத் தொடங்கியது. சாரதியும் உதவியாளரும் சத்தத்தை உறுதிப்படுத்திக் கொண்டனர். அந்தச் சத்தம் அதிகரிக்கத் தொடங்கியதும் பெருந் தெருவிலிருந்து வெளியேறி சிறு தெருவின் வயல் கரையே அமரர் ஊர்தி போய் நின்றது. நாமும் அவர்களைத் பின்தொடர்ந்து போய் எமது வாகனங்களை நிறுத்தினோம். நான் சென்ற வாகனத்தில் முக்கிய பிரதிநிதிகள் இருந்தார்கள். அவர்கள் எல்லோருமே எங்கள் அறைக்கு வந்து சென்று அறிமுகமாகியவர்கள்தான். பிரதிநிதியொருவர் இறங்கிப் போனார். நானும் அவரைத் தொடர்ந்தேன். சாரதியும் உதவியாளரும் வாகனத்தை சுற்றி பார்த்தார்கள். பின்னர் கீழும் மேலுமாக ஆராய்ந்தார்கள். வாகனம் நிறுத்திய பின்னும் சத்தம் கேட்டவண்ணமேயிருந்தது. சவம் என்பது மரியாதைக்குரிய விடயம். வாகனத்தின் பின் கதவை திறந்தார்கள். பேளை இருக்குமிடத்திலிருந்துதான் சத்தம் வந்துகொண்டிருந்தது. அவர்களுக்கு அச்சத்தை

ஏற்படுத்திற்று. அவர்கள் செய்வதறியாது பொலீசுக்கும் தங்கள்மேலாளருக்கும் அழைப்பை ஏற்படுத்தினார்கள். பொலிஸ் வந்து சேர்ந்தது. எல்லோரும் வாகனத்துக்குள் இருக்குமாறு பொலிசார் கட்டளையிட்டனர். என்னையும் பிரதிநிதியையும் வருமாறு அழைத்தனர். மேலும் இரு பொலிஸ் வாகனங்கள் வந்து பாதைப் போக்குவரத்தை கவனித்தன. பெட்டிக்குளிருந்து சத்தம் வந்து கொண்டிருந்தது. சத்தத்தை பொலிசாரும் கேட்டார்கள். பேளைக்குளிருந்துதான் வருவதாக உறுதிப் படுத்தினார்கள். ஆனாலும், அவர்களால் பேளையைத் திறக்க முடியாது. அது சவத்திற்கு கொடுக்கும் அவமரியாதை. மேலாளர் வந்து சேர்ந்தார். அவரும் சத்தத்தைக் கேட்டார். பேளைக்குளிருந்து வருவதாக அவரும் உறுதிப்படுத்திக்கொண்டார்.

“கனகன் எழும்பியிட்டானோ” என பிரதிநிதி என்னைப் பார்த்துக் கேட்டான்.

கனகன் அமைதியாக எத்தனையோ காரியங்களை செய்துவிட்டு போயிருக்கிறான். பார்டரில் எத்தனை அதிகாரிகளுக்கு தண்ணி காட்டியிருப்பான். சொல்ல முடியாது.

“சிலவேளை எழும்பியிருப்பான்.”

யோகன் குளறிக்கொண்டு செய்கிற காரியத்தை கனகன் அமைதியாக முடித்துவிட்டு ஒன்றுமே தெரியாதவன்போல் இருப்பான். எங்கள் அறைக்கு வருபவர்களை கவனிப்பது தனது கடமையென்று நினைத்திருந்தான். ஒரு தாய்போல் சாப்பாடு மேசையில் உணவு இருப்பதை உறுதிப்படுத்திக் கொள்வான்.

பிரதிநிதி பேளையைத் திறந்து பார்க்குமாறு வற்புறுத்தினார். அது அவமரியாதை தாங்கள் வீதியில் வைத்து பேளையைத் திறக்க முடியாது என மறுத்தார்கள். பின்னர் நீண்ட வாதப் பிரதிவாதங்களின் பின்னர் பேளையை மரண மண்டப மேலாளார் திறந்தார். அதற்குளிருந்து இரண்டு கிலோ எடையுள்ள சேவல் கோழி தள்ளாடியபடி எழுந்து நின்றது.

“இது என்ன வேலையடா” என மேலாளர் கத்தினான்.

சேவலைப் பிடித்து பொலிசிடம் கொடுத்தான்.

“அது ஆறு முட்டையும் இட்டிருக்கிறது” என மெல்லிய சிரிப்போடு அவற்றையும் தூக்கி பொலிசிடம் கொடுத்தான்.

வெளிக் காற்றுப் பட்டதில் சேவல் புத்துணர்வு பெற்று சிறகை அடித்தது. அதற்கு களைப்பு அகல பொலிசார் தண்ணீர் பருக்கினர். இந்துக்களின் நம்பிக்கையென்று பொலிசுக்கு விளக்கப்படுத்த முயற்சி எடுத்துக்கொண்டிருந்தார் பிரதிநிதி.

“சவத்தை சிவமாக்கி, சிவத்தை சேவலாய் ஆக்கியிட்டாங்களோ” என்று பிரதிநிதியிடம் கேட்டேன்.

“லூசன் யோகன்” என்றார் பிரதிநிதி.

இறுதிக் கடன் முடியும் வரை இது குறித்து எதுவித நடவடிக்கையும் எடுக்கவேண்டாமென பிரதிநிதி பொலிசாரை மன்றாட்டமாகக் கேட்டுக் கொண்டார். இங்கு நடந்த விடயங்கள் பின்னுக்கு நின்ற வாகனத் தொடருக்கு தெரியாததையிட்டு பிரதிநிதி மகிழ்ந்து போயிருந்தார். அனைத்து விபரமும் பொலிசார் பதிவு பண்ணிய பின்னர் வாகனத் தொடர் எரிக்குமிடம் நோக்கி நகர்ந்தது.

பேளைக்குள் ஏழு உயிரைச் சேர்த்து அனுப்பினால் பஞ்சமி தோசம் போகுமென்று சிவசர்மா குருக்கள் யோகனுக்கு அறிவுரை கூறியிருக்கிறான். ஒரு சேவலை வாங்கினான். அதற்கு சாராயத்தை பருக்கி செட்டையை பூட்டி முட்டைகளோடு பூக்கூடைக்குள் மறைத்து மண்டபத்திற்கு கொண்டுவந்து சேர்த்தான். பேளையை மூடும்வரை அருகிலேயே நின்றான்.

“கடசியாய் பார்க்கிற ஆட்கள் பாருங்கோ எரிக்கிற இடத்தில பெட்டி திறக்க மாட்டம்” என்று கத்தி அறிவித்தான்.

பேளையை மூட முன்னர் காலடிக்குள் சேவலையும் முட்டைகளையும் போட்டு பூக்களால் மூடிவிட்டான்.

எரிக்குமிட வாசலிலிருந்து 100 மீற்றர் வரை இருமருங்கும் கறுப்பு சேலை அணிந்த பெண்களும், வெள்ளை சேட்டும் கறுப்பு பான்ஸ்சும் அணிந்த ஆண்களும் கூடை நிறைய பூக்களை சுமந்த வண்ணம் பேளையின் வரவைப் பார்த்தபடி இருந்தார்கள். யோகனும் நானும், நான்கு பிரதிநிதிகளும் பேளையை தோளில் தாங்கி எரிக்குமிடம் நோக்கி நகர்ந்தோம். பேளை மீது இரு கரையிலும் இருந்து பூக்கள் தூவப்பட்டன. நண்பனை சுமப்பது இலகுவானதில்லை. நல்லவனைத் தூக்குகிறோம். அவனுக்கு தூவிய பூக்கள் எம் மீதும் வீழ்ந்தன. தனது சிக்கல்களை மற்றவர்களோடு கனகு பகிர்வது கிடையாது. இறுதியாக சந்தித்தபோது மனம்விட்டு கதைத்தான். தன் குறித்தான பழிச்சுமை அவனை வாட்டியிருந்தது.

“மச்சான் உன்னோட கதைச்சாப் பிறகு சந்தோசமாய் இருக்கு. தண்ணி அடிக்க வேணும்போல இருக்கு” என்று என்னை கட்டிப் பிடித்தான்.

“வாடா வீட்டை சமைத்து சாப்பிடுவம்” என்றான்.

அவனே சமைத்து சாப்பாடு தந்தான். தெருவில் உதவியில்லாமல் நின்ற எத்தனை தமிழர்களை அழைத்து வந்து சாப்பாடு இட்டிருக்கிறான். அவன் மனப்பாரத்தை சற்று இறக்கியிருந்தான். அவனது பாரத்தை நண்பனாய் சுமக்கிறேன். என் கண்களிலிருந்து கண்ணீர் கட்டற்று ஓடிக்கொண்டிருந்தது.

உலையின் முன்னால் உள்ள தட்டில் பேளையை வைத்தோம். யோகன் தேவாரம் பாடி “ஓம் நம சிவாய” எனக் கத்தினான். அவனோடு சேர்ந்து நின்ற பலரும் கத்தினார்கள். சோகம் தாளாமல் உறவுகள் ஓலமிட்டு அழுதனர். உலையின் கதவு ஆவென்று திறந்து பேளையை உள்ளிழுத்து மூடியது. எரிந்த சிறு நெடி வெளியில் சற்றுப் பரவிற்று. அது சேவலின் இறகின் மணம்போல் யோகனுக்குப்பட்டது. அவனது முகம் மரண ஓலத்திலும் சற்று ஒளிர்ந்திருந்தது. ●

பா.அ. ஜயகரன் <jayacs@gmail.com>

# ப்ரவுனிக்குச் சில கவிதைகள்

ஷங்கர்ராமசுப்ரமணியன்



*பளபளக்கும் கண்கள் ஆடும் வால்*
*பிரபஞ்சம் நாய்க்குட்டி வடிவத்தில்*
*விளையாட அழைக்கிறது.*

- ஒரு ஹைகூ கவிதை

ஆம், ப்ரவுனி
கோலி உருண்டைக்குள்
பூவாய் ஒளிரும்
ஒளிதான் உன் கண்கள்
அந்தப் பூவிலிருந்து
நீள்வதுதான்
உனது ஆடும்
துடுக்குவால்

அழைக்கிறது
எல்லையற்று விளையாட.

விளையாடு
விளையாட்டை நிறுத்தும் வரை
மரணமில்லை

விளையாடு
இலக்கை மறந்து
இலக்கையே விளையாட்டாக்கி
விளையாடு
விளையாடும் வரை மரணமில்லை.

விளையாடு
உலகத்தைப் பந்தாக்கி
உன்னையே
பந்தாகப் பாவித்து
விளையாடு

பால்கனி
முற்றம்
சிறை மதிலோரம்
படுக்கையறை
சடலக்கூடம்
பேதமற்று விளையாடு

சின்னது பெரியது
காற்று போனது
எல்லாவற்றுக்கும்
உயிர்கொடுத்து விளையாடு
இறந்த பந்தென்ற ஒன்று இல்லை

எலும்பு உடையாது
உயிர்போகாது
அனுமன் போல
எத்தனை உயரமென்றாலும்
குதி பற
உடல் காற்றாக மாற
மனத்தை உருட்டி விளையாடு
உன் இதயம் நாக்காகட்டும்
வெளியே காட்டு
தப்பொன்றுமில்லை
தேகம் உலை போல் எரிந்து
விசிலென இரையட்டும்
விளையாடு

****

உனது குரைப்பு
இன்னும் பிஞ்சாகவே
இருக்கிறது
அது உனக்குத் தெரியவில்லை
அதனால் பெரிய நாய்களின்
குரைப்போடு
போட்டிப் போட்டுக்
குரைக்க
வேண்டாம்.

தொண்டை கெட்டுப்போகும் ப்ரவுனி
அதனால் கொஞ்சம் சோடா சாப்பிடு.

****

சுந்தர ராமசாமி சொல்லியிருக்கிறார்
உன் தட்டில் போடப்பட்டதை
நீ சாப்பிடு
நான் தின்னுவதைப்
பார்த்து ஏங்காதே
ப்ரவுனி ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
<shankarashankara@gmail.com>

# திரைக்கதையில் எப்போதும் முரண் தேவைப்படுகிறது!

மைக்கேல் ஹசானவிஸியஸ்



தமிழில்:
ராம் முரளி

பிரெஞ்சு புதிய அலை இயக்க முன்னோடி இயக்குனர்களில் ஒருவரான ழான் லூக் கொடார்ட், தனது சுதந்திர உணர்வை கொண்டாடும் புதுவகையிலான திரைப்படங்களுக்காக கொண்டாடப்பட்டவர். உலகம் முழுக்க உள்ள பல புகழ்பெற்ற திரைப்பட இயக்குனர்களின் ஆதர்சமாக திகழ்பவர். திரைப்படத்தின் அடிப்படை இலக்கணங்களையே தகர்க்கக்கூடிய வகையில் இவர் திரைப்படங்கள் இருக்கின்றன.

கொடார்ட் வாழ்க்கையின் கொந்தளிப்புமிக்க காலக்கட்டமாக பிரெஞ்சு மாணவர் புரட்சி நடைபெற்ற 1960கள் இருக்கின்றன. அக்காலத்தில்தான் கொடார்ட் மிகுதியான அரசியல் திரைப்படங்களை இயக்கிக் கொண்டிருந்தார். அவரது தனிப்பட்ட வாழ்க்கையிலும் இவ்வருடங்கள் முக்கியத்துவம் வாய்ந்தவை. 'லா சைனீஸ்' திரைப்படத்தில் நடித்தவரும் புகழ்மிக்க பிரெஞ்சு நாடக ஆசிரியருமான பிரான்சிஸ் மோரியாக்கின் பேத்தியுமான அன்னா வியாஸெம்க்ஸியை (Anne Wiazemsky) கொடார்ட் மணந்துக்கொண்டதும் இக்காலக்கட்டத்தில்தான். இருவருக்குமிடையில் அதிக வயது வித்தியாசம் இருந்தது. என்றாலும், அன்றைய சூழலில் கொடார்ட் மீது கவிந்திருந்த கலகத்தன்மையிலான பிம்பம் வியாஸெம்க்ஸிக்கு கொடார்ட் மீது பெரும் ஈர்ப்பை உண்டாக்கியிருந்தது. ஆனால், அதீத நேசத்தின் வாயிலாக துவங்கியிருந்த இவ்வுறவு சில வருடங்களிலேயே நீர்த்துப்போனது. கொடார்ட்டிடம் இருந்த, அன்றைய கொந்தளிப்புமிக்க அரசியல் சூழல் மீதான நாட்டமே இருவரும் பிரிவதற்கான முக்கிய காரணமாகவும் அமைந்துவிட்டது. அதோடு, கொடார்ட்டின் விசித்திரமான குணவியல்புகளும் இருவரின் பிரிவுக்கு பிற காரணங்களாக அமைந்திருந்தன.

கொடார்ட் உடனான தனது அனுபவங்களை வியாஸெம்க்ஸி பிரெஞ்சு மொழியில் தனியொரு நாவலாக எழுதியிருக்கிறார். அந்த அனுபவங்களை அடிப்படையாக கொண்டு, 'ReDoubtable' எனும் திரைப்படத்தை உருவாக்கியிருக்கிறார் மைக்கேல் ஹசானவிஸியஸ். இவர் 2011இல் வெளியான 'The Artist' திரைப்படத்துக்காக வெகுவாக கொண்டாடப்பட்டவர். கொடார்ட்டின் மீது மிகுதியான மரியாதைக் கொண்டிருக்கும் ஹசானவிஸியஸ், 'ReDoubtable' படத்தில் கொடார்ட்டின் படைப்பாக்க பாணியிலேயே காட்சிகளை அமைத்திருக்கிறார். அண்மை கோணங்கள், காட்சியில் கவிந்திருக்கும் நிறத் தேர்வு, திடீரென்று கதாப்பாத்திரங்கள் கேமிராவை பார்த்து பேசுவது, தத்துவார்த்த விசாரணைகள் என கொடார்ட்டின் செவ்வியல் திரைப்படங்களை நினைவுக்கூரும் வகையிலேயே 'ReDoubtable' உருவாகியிருக்கிறது. 2017இல் வெளியான இத்திரைப்படம் விமர்சகர்களுக்கிடையில் சலசலப்பை உருவாக்கியிருந்தது. உண்மை நிகவுகளை அடிப்படையாக கொண்டு இயக்கப்பட்ட இத்திரைப்படத்தின் இயக்குனர் மைக்கேல் ஹசானவிஸியஸிடம் 730 review மேற்கொண்ட நேர்காணலின் தமிழாக்கம் இது.

**உங்கள் திரைப்படம் வியாஸெம்க்ஸி எழுதிய புத்தகத்திற்கு எவ்வளவு நெருக்கமாக உருவாக்கப்பட்டிருக்கிறது?**

ம்ம்ம். அந்த புத்தகம் மிகுந்த கேளிக்கை உணர்வை அளிக்கக்கூடியது. வியாஸெம்க்ஸி புத்தகத்தில் பல இடங்களில், "ழான் லூக் மிக மிக வேடிக்கையான மனிதர். அவரது செயல்களில் கேளிக்கை உணர்வே நிறைந்திருக்கின்றன" என்று எழுதியுள்ளார். இந்த புத்தகம் முழுமையாக வேடிக்கையான சம்பவங்களால் நிறைந்திருக்கவில்லை என்றாலும், அவ்வருடங்களில் கொடார்ட் மகிழ்ச்சிக்கரமாக வாழ்ந்திருக்கிறார். அதனால், ஒரு மென்மையான, அதே தருணத்தில் சிற்சில சமயங்களில் மட்டும் நகைப்பூட்டக்கூடிய காட்சிகளை கொண்ட திரைப்படமாக, இதனை உருவாக்கலாம் என்று முடிவு செய்தேன். அதுதான் நேர்மையான அணுகுமுறையாக இருக்கும் என்பது எனது எண்ணமாக இருந்தது.

ஆனால், மற்றொரு கோணத்தில் வியாஸெம்க்ஸி சிறப்பாக எழுதியிருக்கிறார். அக்காலங்களில் கொடார்டை அவர் எவ்வாறு மோகித்திருந்தாரோ அந்த எண்ணத்திற்கு முழுமையான மரியாதையை புத்தகத்தில் அவர் அளித்திருந்தார். அவர்கள் இருவருக்கும் இடையிலான உறவு முறிந்து 40 வருடங்களுக்கு பிறகே அந்த புத்தகத்தை அவர் எழுதியிருந்தார் என்றாலும், அக்காலத்தில் தான் எவ்வாறு வாழ்ந்திருந்தாரோ அதுக்குறித்த பெருமிதமும் புத்தகத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.

**உங்களது தனித்துவமான குணவியல்புகள் சிலவற்றையும் திரைப்படத்தில்**



புகுத்தியிருக்கிறீர்கள் என்று சொல்லலாமா?

ஆம். நிச்சயமாக. எனது மனைவி பெரைன்ஸ் இந்த திரைப்படத்தை எனது சுய வாழ்க்கையின் பிரதிபலிப்பு என்றே குறிப்பிடுகிறார். அதாவது, கொடார்ட்டுக்கும் அவரது முன்னாள் மனைவிக்குமான நெருக்கமான காட்சிகளை நான் அணுகியிருந்த விதத்தை வைத்து எனது மனைவி அவ்வாறு குறிப்பிட்டிருக்கவில்லை. ஏனெனில், அத்தனை போதை மிகுந்ததாக எங்களது உறவு இல்லை (சிரிக்கிறார்). ஒரு இயக்குனர் தனது படைப்புகள் குறித்து எப்போதும் சந்தேகத்தில் ஆழ்ந்திருப்பதும், தனது அடுத்தடுத்த நகர்வுகளை எவ்வாறு கட்டமைக்க வேண்டும் என்கின்ற கேள்விகளை சுமந்திருப்பதையும் வைத்தே எனது மனைவி அந்த கூற்றை முன்மொழிந்தார்.

கொடார்ட் 'லா சைனீஸ்' திரைப்படம் உருவாக்கிக் கொண்டிருந்த காலத்தில், தான் மிக சீரிய பணியொன்றை செய்து கொண்டிருப்பதாக உறுதியாக நம்பிக் கொண்டிருந்ததும், ஆனால், மக்கள் அந்த திரைப்படத்தை பெரிதாக வரவேற்கவில்லை என்கின்ற சம்பவங்களும், என்னை வெகுவாக பாதித்திருந்தன. இதே வகையிலான அனுபவம் எனது 'The Search' திரைப்படத்துக்கும் நேர்ந்திருக்கிறது (சிரிக்கிறார்). அதனால், அந்த காட்சிகளில் எனது சுய அனுபவங்கள் சிலவற்றையும் சேர்த்துக்கொள்ளலாம் என்று கருதினேன்.

கொடார்ட் பற்றிய திரைப்படம் எடுக்க எது உங்களுக்கு உந்துதலை உருவாக்கியது?

வியாஸெம்க்ஸி எழுதிய புத்தகம்தான். அந்த புத்தகத்தை வாசிப்பதற்கு முன்பு, கொடார்ட் பற்றிய திரைப்படம் எடுக்கும் எண்ணம் ஒருபோதும் எனக்குள் எழுந்ததில்லை. உண்மையில், அவருடன் மிகவும் சுமூகமான உறவினையே கொண்டிருக்கிறேன். அவரை அதிகளவில் போற்றி வழிபடவும் எனக்கு விருப்பமில்லை. அவரை நான் வெறுக்கவும் இல்லை. அவர் மீதான மரியாதை எப்போதும் இருந்துக்கொண்டுதான் இருக்கிறது. ஆனால், அவரது திரைப்படங்களுடன் செவ்வியல்தன்மையிலான உறவு எனக்கு இருக்கிறது. 60களில் இருந்து அவர் உருவாக்கி வரும் திரைப்படங்கள் சிறப்பானவையாகவும், போதை அளிக்கக்கூடியதாகவும், உயிர்ப்புமிக்கதாகவும் இருந்திருக்கின்றன. எனினும், அந்த புத்தகத்தை படிக்கும்வரையில் அவரைப் பற்றிய திரைப்படம் இயக்கும் எண்ணம் எனக்குள் உருவாகியிருக்கவில்லை.

வியாஸெம்க்ஸி புத்தகத்தில், துயரம் ததும்புகின்ற ஆழமிக்கதொரு காதல் கதையை நான் கண்டடைந்தேன். காதல் கதையொன்றின்

வீழ்ச்சியாகவோ அல்லது பாலியல் சாகசங்களையோ அல்லது காதலின் தேவையை குறித்தோ அந்த புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கவில்லை. நான் அதனில், சில அரசியல் காரணங்களால் மறைந்தழிந்த காதலை பார்த்தேன். எனக்கு அது முற்றிலும் தூய்மையானதாக தோன்றியது. அதிலிருந்து வேடிக்கையான கதையொன்றை சொல்ல முடியும் என்கின்ற எண்ணம் உருவானது. அதுதான் சரியான அணுகுமுறையாக இருக்கும் என்று கருதினேன்.

இத்தாலிய நகைச்சுவை திரைப்படங்கள் இதைதான் வெகு காலமாக சிறப்பாக செய்து வருகின்றன. நாடகீய தருணங்களுக்கும், துயரார்ந்த கதையின் முடிவுக்கும் இடையில் ஒருவிதமான சமநிலையை தோற்றுவிப்பது.

கொடார்ட் இந்த திரைப்படத்தை பற்றி என்ன நினைக்கிறார் என்று உங்களுக்கு தெரியுமா?

இல்லை. ஆனால், நான் அவரை சந்திப்பதற்கு முன்னதாக, அவர், இத்தகைய யோசனை மிகவும் முட்டாள்தனமானவை என்று குறிப்பிட்டதாக கேள்விப்பட்டிருக்கிறேன். எனினும், இத்தகைய கூற்றை இயல்பாக எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். எந்தவொரு சராசரி மனிதரையும் நெருங்கி, “உங்களது வாழ்க்கையை திரைப்படமாக உருவாக்கப் போகிறேன்” என்று சொன்னால், அவர்களது எதிர்வினை இவ்வகையில்தான் அமைந்திருக்கும். இதுதான் கொடார்ட் அளித்த மிக நேர்மையான பதிலாக இருந்திக்கக்கூடும் (சிரிக்கிறார்). அல்லது அதற்கு மேலும் எதுவும் பேச வேண்டாம் என்று முடிவு செய்துவிட்டாரா என்பதும் எனக்கு தெரியவில்லை. அவர் எதுவும் தெரிவிக்காமல் மௌனமாக இருந்ததுதான் சரியானது என்று கருதுகிறேன்.

நாங்கள் ‘கேன்ஸ்’ திரைப்பட விழாவுக்கு சென்றிருந்தபோது, சில விமர்சகர்கள் என்மீது அதிருப்தியில் இருந்ததை என்னால் உணர முடிந்தது. கிட்டதட்ட இறுக்க விதிகளை கொண்ட தேவாலயத்தில் இருப்பதைப்போல என்னை அப்போது உணர்ந்தேன். இவைகளை தவிர்த்துவிட்டால், எனக்கு மிகுதியான அளவில் பாராட்டுகள்தாம் கிடைத்தன. சிலர் கொடார்ட்டிடம் இருந்து ஏதேனுமொரு வார்த்தையை உச்சரிக்க செய்ய வேண்டுமென்று கடுமையாக முயற்சித்திருப்பார்கள் என்று யூகிக்கின்றேன். எனினும், அவர் இறுதிவரையில் படத்தைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. இது நல்லதென்றே கருதுகிறேன்.

கொடார்ட்டின் திரைப்படமாக்கல் பாணியில் இந்த திரைப்படத்தை சொல்லுவதுதான் சரியாக இருக்கும் என்று நினைத்தீர்களா?

ஆமாம். ஆனால், எனது முந்தைய இரு திரைப்படங்களான ‘தி ஓஎஸ்எஸ் 117’, ‘தி ஆர்டிஸ்ட்’ ஆகியவைகளின் தொடர்ச்சியின் பரப்புக்குள்ளாகவே இது நிகழ்ந்திருக்கிறது. பிரெஞ்சு புதிய அலை திரைப்படங்களும், குறிப்பாக கொடார்ட்டின் திரைப்படங்களும் அதீத சுதந்திர உணர்வுகொண்டதாகவும், கிளர்ச்சிக்குள்ளாக்கும் வகையிலும் உருவாக்கப்பட்டிருந்தது.கொடார்ட் தனது சுயத்தை கூடுமானவரையில் அத்திரைப்படங்களில் தவிர்த்திருந்தார். சில நேரங்களில், மற்றவர்கள் செய்துகொண்டிருக்கும் திரைப்படங்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டவையாக தனது திரைப்படங்கள் இருக்க வேண்டுமென்கின்ற நோக்கில் மட்டுமே இத்தகைய திரைப்படங்களை அவர் உருவாக்கினார். என்றாலும், இன்றைக்கு அவைகளை பார்க்கும்போதும், அத்திரைப்படங்கள் புதியதை பார்ப்பதைப் போன்ற அனுபவத்தையே அளிக்கின்றன. அவரது பாணியை பின்பற்றி பல தொலைக்காட்சி விளம்பரங்களும், நாடகங்களும் இயக்கப்பட்டிருக்கின்றன. என்றாலும், இன்னமும் அவர் உருவாக்கிய காட்சித் தொகுப்புகள் வியப்பிலாழ்த்தும் வகையில் எக்காலத்துக்கும் புதியதாகவே இருக்கின்றன. அதனால், எனது திரைப்படத்தில் அதனை மீளுருவாக்கம் செய்யலாம் என்பதைவிட, அக்கால திரைப்பட அழகியலை நெருங்கிச் செல்லலாம் என்று நினைத்தேன். இதன் வாயிலாக, ஒரு செவ்வியல் பிரதிக்குரிய இலக்கணங்களில் பொருந்தத்தக்கதாக எனது திரைப்படத்தின் கதையை விவரிக்கலாம் என்று தீர்மானித்தேன். என்னை பெரிதும் மகிழ்வில் ஆழ்த்திய செயல்பாடு இது.

1960களில் இருந்த பிரெஞ்சு மக்களின் கண்ணோட்டத்தை இந்த திரைப்படத்தில் பதிவு செய்திருப்பதாக கருதுகிறீர்களா?

இந்த திரைப்படம் அத்தனை பெரியதல்ல. ஆனால், இந்த திரைப்படத்தை பார்த்தவர்கள் அக்காலக்கட்டம் உருவாக்கப்பட்டிருக்கும் விதத்தை போற்றி புகழவே செய்தார்கள். பிரான்ஸ் வரலாற்றில் 1968 மே மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த குறியீடு தன்மையில் நிலைபெற்றிருக்கும் ஒரு நிகழ்வாகும். கொடார்ட்டும் குறியீடுத்தன்மையில் நிலைத்திருக்கிறார் என்றாலும், இவ்விரண்டுக்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கின்றன. கொடார்ட் பொருளாதார ரீதியில் மேலடுக்கில் இருப்பவர்களுக்கான மனிதராக இருந்தார். அதனால், பெருவாரியான மக்கள் அவரது வாழ்க்கை குறித்தோ, அவர் விவாதிக்கின்ற தலைப்புகள் குறித்தோ பெரியளவில் அக்கறை செலுத்தவில்லை. ஆனால், 1968 மே மாதம்தான், நாங்கள் அதுநாள் வரையிலும் வாழ்ந்து வந்த வாழ்க்கை முறையையே மாற்றி அமைத்தது. எங்களை சுதந்திரமானவர்களாக உணரவும் செய்தது. கல்விமுறையும், பாலியல் சார்ந்த அணுகுமுறையும், அரசியலும் அதன்பிறகான காலத்தில் பெரிதும் மாற்றமடைந்துவிட்டது. அதனால், உண்மையிலேயே, 1968 மே எங்கள் வாழ்க்கையை முற்றிலுமாக புரட்டிப்போட்ட ஒரு நிகழ்வு என்று சொல்லலாம்.

அந்த குறிப்பிட்ட காலம் எப்போதும் அதே உத்வேகத்துடனும், பொலிவுடனும் வரலாற்றில் உறைந்துள்ளது. எங்கள் திரைப்படம் அக்காலத்தை காட்சிப்படுத்தியிருப்பதைப்போல வேறெந்த திரைப்படமும் செய்திருக்கவில்லை என்று நம்புகிறேன். இது மிகவும் வேடிக்கையானது. மக்கள் கைகளில் ஏந்தியிருந்த பதாகைகளில் குறிப்பிடப்பட்டிருந்த சொற்கள் நகைப்பூட்டக் கூடியவையாக இருந்தன. புகைப்படங்களில் காணக்கிடைக்கின்ற முக்கிய களப்பணியாளர்களின் முகங்கள் எப்போதும் சிரித்தபடியே இருக்கின்றன. கிட்டதட்ட கர்வம் மிகுந்ததாக அவர்களது சிரிப்பு இருக்கிறது.



ReDoubtable

காவல்துறையினர், ஏனைய அவர்களை ஒடுக்குகின்ற பிற எல்லாவற்றுக்கு எதிராகவும் மென்மையான, அதே தருணத்தில் அர்த்தம் நிரம்பிய புன்னகையை அவர்கள் உதடுகளில் மிளிரவிடுகிறார்கள். அதனால், இத்தகைய தன்னம்பிக்கை நிறைந்த போராட்டக்காரர்களின் கலகப் பண்பை காட்சிப்படுத்த வேண்டுமென்று விரும்பினேன்.

ஒரு உறவின் முறிவு கதையை எழுதுவது துவக்கத்தில் உங்களுக்கு எளிதாக இருந்ததா?

உறவுக்களுக்குள் முரண்பாடுகள் நிலவியிருக்கும்போது அதனை எழுதுவது எளிதானது என்று கருதுகிறேன். திரைப்படம் துவக்கத்தில் சில நிமிடங்கள் மிகவும் மெதுவாக நகர்வதாக தெரியக்கூடும். ஏனெனில், அப்போதும் இருவருக்குமிடையில் எவ்வித முரண்பாடுகளும் இல்லை. இரு நபர்கள் ஒருவரை ஒருவர் அதீதமாக காதலிப்பது மட்டுமே துவக்கத்தில் சொல்லப்படுகிறது. அக்காட்சிகள் எவருக்கும் சுவராஸ்யமளிப்பதாக இருக்காது. திரைக்கதையில் எப்போதும் நமக்கொரு முரண் தேவைப்படுகிறது. இது மிகவும் வழமையான முறையாகவே தெரியலாம். படத்தின் துவக்கமும், முடிவும் எப்போதும்போல முடிவடைவதாக எண்ண வாய்ப்பிருக்கிறது.

எனக்கிருந்த கேள்வி என்னவென்றால், எப்படி இந்த கதையை மிக நேர்மையாக காட்சிகளில் விவரிப்பது, அவர்களது உறவின் இறுதி கணங்களை எவ்வாறு அதிக உண்மைத்தன்மையுடன் பதிவு செய்வது என்பதுதான். அந்த புத்தகம் இதனை மிகச் சிறப்பாகவே சொல்லியிருந்தது. யதார்த்தத்தில் என்ன நிகழ்ந்திருக்கிறது என்பது மிகவும் சுவாரஸ்யமானது. கொடார்ட்டை விட 20 வயது குறைந்த பெண் வியாஸெம்க்ஸி. அதனால், வியாஸெம்க்ஸி எப்போதும் கொடார்ட்டின் எண்ண ஓட்டங்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய, தன்னிச்சையாக தனது விருப்பங்களை வெளிப்படுத்த இயலாத பெண்ணாகவே இருந்திருக்கிறார்.

60களில் ஒரு பெண் இன்றைய நவயுக பெண் வாழ்வதைப்போல வாழும் சூழல் நிலவியிருக்கவில்லை அல்லவா? அதனால், வியாஸெம்க்ஸி ஒரு பார்வையாளராகவே இருந்திருக்கிறார். கொடார்ட்டுடன் அதிகளவில் உரையாடல்களில் பங்கேற்காமல் அமைதியாக அவர் பேசுவதையெல்லாம் கேட்டுக்கொண்டிருக்க அவரால் முடிந்திருக்கிறது. அதிலும், உங்கள் கணவரின் குணவியல்புகள் மெல்ல மெல்ல மாற்றமடைந்துக் கொண்டிருக்கிறது என்பதை உணருகையில், அது உண்மையிலேயே அதிக மன அழுத்தத்தை உருவாக்கக்கூடிய சூழல்தான்.

கொடார்ட் இயக்கிய ‘Contempt’ திரைப்படம் ஏதேனுமொரு வகையில் மண உறவு முறிவு குறித்த உங்களது பார்வையில் பாதிப்பை ஏற்படுத்தியிருக்கிறதா?

துவக்கத்தில் நான் அதனை உணர்ந்திருக்கவில்லை. ஆனால், திரைப்படத்தின் பணிகள் வளர்ந்துக்கொண்டிருந்த தருணத்தில்தான் Contempt திரைப்படமும், எங்களது திரைப்படமும் ஒரே பேசுபொருளை கொண்டிருக்கிறது என்பதை புரிந்துகொண்டேன். ஒரு பெண் தனது கணவனையே பார்த்தபடியே பொழுதுகளை கழிப்பதும், தனது சுயத்துக்கான முக்கியத்துவம் அவரிடத்தில் இல்லை என்பதை உணருவதும், பின் அவரை காதலிப்பதிலிருந்து தன்னையே விலக்கிக்கொள்வதும், அல்லது தான் அவர் மீது இன்னமும் காதல் கொண்டிருக்கவில்லை என்பதை குறைந்தபட்சம் உணரவாவது செய்வதும் என, கிட்டத்தட்ட எனது திரைப்படத்தின் கதையோட பெருமளவில் Contemptஐ ஒத்திருந்தது.

அதனால், மாறுபட்ட வடிவத்தில் இக்கதையை சொல்வதென்று முடிவு செய்தேன். புத்தகத்திலும், Contemptதிரைப்படத்திலும் இருந்த ஒரேயொரு ஒற்றுமை என்னவென்றால், கொடார்ட் கேன்ஸ் செல்லும் தருணத்தில், அவர்கள் பிரான்ஸின் தென் பகுதிக்கு செல்லும் காட்சிதான். சூரிய ஒளி மினுங்குகின்ற



ReDoubtable

கடற்கரையில் ஆடையின்றி படுத்திருக்கும் காட்சி, Contempt திரைப்படத்தை நினைவூட்டும் வகையில் சேர்க்கப்பட்டதுதான். இதனை நான் தெளிந்த மனநிலையில் விருப்பத்துடன்தான் வைத்திருந்தேன். அதேபோல, இத்திரைப்படத்தின் எழுத்துப் பணி நிகழ்ந்த காலத்தில் இருந்தே கொடார்ட்டின் திரைப்படங்களை தொடச்சியாக பார்த்துக் கொண்டிருந்தேன். குறிப்பாக 60களில் அவர் இயக்கிய திரைப்படங்களை அதிகளவில் பார்த்துக் கொண்டிருந்தேன். என்றாலும், ஒரு நிலையில் அதனை முற்றிலும் கைவிட்டுவிட்டேன். ஏனெனில், நான் கொடார்ட்டின் திரைப்பட பாணியை எனது திரைப்படத்தில் மீளுருவாக்கம் செய்ய விரும்பவில்லை. அவர் குறித்தான நினைவு தொகுப்புகளைத்தான் உருவாக்கும் முனைப்பில் இருந்தேன்.

ஆஸ்கார் விருது வாங்குவதில் ஏதேனும் சிக்கல் இருப்பதாக நினைக்கிறீர்களா?

ஆமாம். இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த முன்னெடுப்புகளில் எப்போதும் பக்கவிளைவுகள் இருக்கத்தான் செய்கின்றன. பிரக்ஞையற்றத்தன்மையில் அது உங்களை பெரிதளவில் பாதிக்கவும் செய்கிறது. எனினும், என்னால் உறுதிபட கூற முடியவில்லை. அதேபோல, அது மக்கள், உங்களையும் உங்களது படைப்பையும் எவ்வாறு அணுகுகிறார்கள் என்பதையும் பாதிக்கவே செய்கிறது.

சிலர் உங்களை அதிகளவில் நேசிக்கவும், காரணமின்றி வெறுக்கவும் செய்கிறார்கள். அதனால், எதுவும் நிகழ்ந்திராத ஒரு சராசரியான இயக்குனராக இருக்கவேண்டும் என பலமுறை விரும்பியிருக்கின்றேன். மக்கள் எதை புரிந்துகொள்ள வேண்டும் என்றால், நான் வெற்றியை தேடி நகர்ந்திருக்கவில்லை. நானொரு திரைப்படத்தை உருவாக்கினேன். பார்வையாளர்கள் அதனை வெற்றியடைய செய்திருக்கிறார்கள். அவ்வளவுதான். நானொரு பார்வையாளனாக இருப்பதையே விரும்புகின்றேன்.

காலவயப்பட்ட 'தி ஆர்டிஸ்ட்' போன்ற படைப்புகளை உருவாக்க விரும்புகிறீர்களா அல்லது பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கும் 'தி சேர்ச்' போன்ற படைப்புகளை உருவாக்க விரும்புகிறீர்களா?

'தி சேர்ச்' திரைப்படமும் என்னளவில் ஒரு மீளுருவாக்க திரைப்படம்தான். 2000த்தில் நிகழும் அந்த கதையை என்னால் 15 ஆண்டுகளுக்கு பின்னர்தான் உருவாக்க முடிந்தது. அதோடு, அந்த கதையும் எனது வாழ்க்கையிலிருந்து வெகுதூரம் விலகியிருக்கிறது. அதனால், நாங்கள் எல்லாவற்றையும் உருவாக்கம் செய்ய வேண்டியிருந்தது. அதனை ஒரு காலவயப்பட்ட படைப்பு என்று குறிப்பிடமாட்டேன். அதே தருணத்தில், தற்காலத்தை பிரதிபலிக்கும் படைப்பு என்றும் சொல்லலாகாது. எந்த தருணத்திலும் களத்தில் இறங்கி, ஒரு செவ்வக சட்டகத்தை தேர்வுசெய்துவிட்டு, "சரி நாம் இப்போது படம் பிடிக்கலாம்" என்று சொல்ல முடியாது. ஏனெனில், அந்த சட்டகத்தை, இடம்பெறும் அனைத்தையும் நாம் முன்னதாக உருவாக்கியிருக்கவேண்டும். இயக்குனராக எனக்கு இது மிகப்பெரிய சவாலை முன்வைக்கும் திரைப்படமாகும். அதோடு, கதைக்கும் கதாப்பாத்திரங்களுக்கும், பார்வையாளருக்கும் இடையில் சினிமாவை துளியேனும் உள்ளிழுப்பதற்கான சாத்தியத்தை 'தி சேர்ச்' திரைப்படம் எனக்கு அளித்தது. இது ஒரு நிலைக் கண்ணாடியைப்போல செயல்படுகிறது.

நீங்கள் திரைப்படங்களை அதிகளவில் நேசிப்பவர் என்று குறிப்பிடலாமா?

என்னை பல்வேறு மனிதர்களுக்கு நிகராக வைத்து பேசுகிறார்கள் என்று கருதுகிறேன். ஆனால், திரைப்படங்களின் மீது தீவிர பித்து கொண்டவரா என்று கேட்டால் இல்லையென்றே சொல்வேன். அதாவது, நீங்கள் க்வெண்டின் டராண்டினோவிடம் உரையாடினால், திரைப்படங்களை பற்றி அவருக்கு அனைத்தும் தெரியும் என்பதை உணர்ந்துகொள்ள முடியும். எனக்கு அவ்வளவு தெரியாது.

‘தி சேர்ச்’ திரைப்படத்தில் இது வேறு வகையில் செயல்பட்டது. கதை விவரிப்பு பாணியில், செவ்வியல் ஹாலிவுட் திரைப்படம் ஒன்றிலிருந்து உந்துதலை பெற்று, அப்படியே எனது திரைப்படத்தில் அதனை பயன்படுத்திக்கொண்டேன். மூலப் படைப்பை எங்கும் நான் குறிப்பிட்டதில்லை. அது இரண்டாம் உலக யுத்தத்தை களமாக கொண்டிருந்தது என்றால், எனது திரைப்படம் செச்சென்யாவில் நிகழ்கிறது. மூலத் திரைப்படத்தில் இருந்து பலவற்றையும் மாற்றி அமைத்ததன் மூலமாக, அதே திரைப்படத்தை நான் உருவாக்கவில்லை என்பதை எனக்குள்ளாக உறுதிப்படுத்திக்கொண்டேன்.

பொதுவாக, காலவயப்பட்ட திரையாக்கங்களை ஒருஇயக்குனர் உருவாக்கிடும்போது, அவர் பெரிதளவில் அக்காலக்கட்டத்தை நிறுவுவதற்கு தான் மேற்கொண்ட பிரயத்தனங்களில்தான் தனது முழு கவனத்தையும் குவித்திருப்பார். அரங்கு வடிவமைப்பு, உடைகள் முதலியவற்றை நேர்த்தியாக பதிவு செய்துவிட வேண்டும் என்பதில் தீவிரமாக இருப்பார். அதனால், இங்கே, இயல்பாகவே காட்சி கோணங்கள், அதனை படமாக்கும் முறை குறித்த கவனம் பிசகியிருக்கும்.

என்னுடைய பாணி என்பது திரைப்படத்தின் அழகியலுக்கும், காட்சித் தொகுப்புகளின் தொடர்ச்சியை கணக்கில்கொண்டும், ஒவ்வொரு தனி ஷாட்டையும் அதிக முக்கியத்துவத்துடன் படமாக்குவதையே விரும்புகின்றேன். பார்வையாளர்களுக்கு ஒரு குறிப்பிட்ட திரைப்படங்கள் சார்ந்த நினைவலைகள் கிளர்த்திவிட்டு, அதன்மீது உங்களுக்கு உரித்தான பிரத்யேக திரைப்பாணியையும் கட்டமைத்துவிட வேண்டும். பார்வையாளர்களை வியப்பில் ஆழ்த்தும் இந்த பணி உண்மையிலேயே மிக அதிக சிரமமானது.

**நிர்வாண காட்சிகளை படமாக்கும்போது, அது குறித்த தெளிவு முன்னதாகவே உங்களுக்கு இருந்ததா?**

இல்லை. இல்லை. ஸ்டேஸி மார்ட்டின்தான் கதாநாயாகியாக தேர்வாகப் போகிறார் என்று எனக்கு முன்னதாகவே தெரியாது. அந்த நிர்வாண காட்சிகளில் துளியும் நான் சமரசம் செய்துக்கொள்ளவில்லை. பொதுவாக, பார்வையாளரின் இருக்கையில் இருப்பதாக என்னை கற்பிதம் செய்துகொள்ளும்போது, “இந்த நிர்வாண காட்சி எனக்கு எதை அளித்துவிடப் போகிறது?” என்று கேட்டுக்கொள்வேன். உண்மையில், மக்கள் நிஜ வாழ்க்கையில் காதலிக்கவும், தங்களது காதலர்களோடு மிக நெருக்கமான உறவினை வளர்த்துக்கொள்ளவும் விரும்புகிறார்கள் என்பது எனக்கு தெரியும். ஆனால், அவர்கள் அதனை திரையில் பார்க்க விரும்புவதில்லை. அதனால், எனக்கே தனிப்பட்ட வகையில் இக்காட்சிகளை பார்ப்பதில் ஒருவித அசௌகர்யமான உணர்வு உண்டாகிவிடுகிறது.

ஆனால், இந்த குறிப்பிட்ட திரைப்படத்தில், கொடார்ட்டின் அந்தரங்கமான பார்வை கோணத்தில் இருந்து சம்பவங்களை அணுகுவதற்காக அக்காட்சிகள் எனக்கு அவசியமாக இருந்தன. அதேபோல, உடலில் ஆடையின்றி இருக்கும் நிலையில், நிர்வாணத்தை பற்றி பேசுகின்ற காட்சி உண்மையிலேயே வேடிக்கையாக இருக்கும் என்று எனக்குப்பட்டது. கடந்த *20* வருடங்களாகவே இத்தகைய காட்சியைப் பற்றி பலமுறை சிந்தித்திருக்கிறேன். எனக்கு சரியானதொரு சந்தர்ப்பம் வாய்க்காமல் இருந்தது. இத்தகைய காரணங்களால் அந்த காட்சியை பயன்படுத்திக்கொள்ளலாம் என்று முடிவு செய்தேன். படுக்கையறை என்பது ஒரு தம்பதியினருக்கு மிக அதிக விசேஷத்தன்மை கொண்ட இடம். தொடர்ச்சியாக அவ்வறை பயன்பாட்டில் இருந்துக்கொண்டே இருக்கும். அதனால், அவ்வறையில் சில டிராமாவை நிகழ்த்திப் பார்க்கலாம் என்று கருதினேன். அதோடு, அந்த நிர்வாண காட்சிகளில், கூடுதல் மிகையாக காட்சிப்படுத்துவதன் வாயிலாக,*60*களின் நறுமணத்தை உருவாக்கிவிட முடியும் என்றும் நம்பினேன்.

**கொடார்ட் கதாப்பாத்திரத்தில் லூயிஸ் கேரலை நடிக்க செய்த வழிமுறை குறித்து சொல்ல முடியுமா?**

எங்களிடம் திரைக்கதை இருந்தது. என்னைப் பொறுத்தவரையில் பல்வேறு வழிமுறைகளில் அதனை அடைய முடியும் என்று கருதுகிறேன். திரைக்கதையை தனியே அமர்ந்து எழுதுகையில் நான் கூடுதல் கவனமாக இருப்பது ஒரு கதாப்பாத்திரத்தின் நிஜ, நிழல் முகங்களுக்கு இடையிலான உறவில் இருக்கின்ற முரண்களை சரியான விகிதத்தில் கையாள வேண்டும் என்பதில்தான். அதனால், இவ்வகையிலான ஒரு திரைப்படத்தை உருவாக்குவது உண்மையிலேயே கொடார்ட்டின் படைப்புகளுக்கு நாம் செய்கின்ற சமர்ப்பணமாக இருக்கும் என்றும் கருதினேன். மேலும் மேலும் அவரை போற்றுகின்ற வகையில் காட்சிகளை அமைக்கின்ற அதேவேலையில், நான் அவரிடமிருந்து மேலும் மேலும் முரண்படுவதை உணர்ந்தே இருந்தேன். ஏனெனில், யதார்த்தத்தில் கொடார்ட் ஒரு முட்டாள். அவர் முட்டாள் என்பதைவிட, முட்டாளைப்போல நடித்துக் கொண்டிருந்தவர் என்று வகைப்படுத்தலாம். அதனால், அவரை கருணையுணர்வுடன் திரைக்கதையில் அணுக வேண்டியிருந்தது. அவர் தானாக வேண்டுமென்றே அவ்வாறு தனது இயல்பை மாற்றிக்கொள்ளவில்லை. அதற்கு அவரொரு காரணத்தை உண்மையை நெருங்கிச் செல்லுதல் கண்டுபிடித்திருந்தார். அதனை அடைவதையே தனது லட்சியவாதமாகவும் தரித்துக்கொண்டார். அவர் ஒரு விசித்திரமான மனிதரென்று நினைக்கிறேன். தன்னை தற்காத்துக்கொள்வதற்காக சுற்றியுள்ள அனைத்தையும் சீரழிக்கிறார் என்றால், நிச்சயமாக அவரை முட்டாள் என்றுதான் குறிப்பிட முடியும். ஆனால், உண்மையில், அப்படி நிகழவில்லை.

லூயிஸுடன் நாங்கள் இணைந்து வேலை செய்ய துவங்கியபோது, இதனையெல்லாம்தான் கருத்தில் கொண்டிருந்தோம். அவர் கொடார்ட்டை அதிகளவில் மோகித்திருக்கிறார். நான் அவரை சிறியளவில் நகைச்சுவை உணர்வுகளின் பக்கம் சாய்க்க முயற்சித்தேன். ஆனால், அவருக்கு அது புரியவில்லை. ”இது நகைச்சுவைதான் என்பதை நம்புகிறேன்” என்று அவ்வப்போது என்னிடத்தில் தெரிவிப்பார். அது உண்மையிலேயே வேடிக்கையானது. அவர் மிக மிக கேளிக்கை மிகுந்த பாவங்களை வெளிப்படுத்திவிட்டு, ”இதில் நகைச்சுவையே இல்லை” என்று லத்தீன் மொழியில் குறிப்பிடுவார். அது கூடுதல் சிரிப்பலையை எங்களிடத்தில் உருவாக்கிவிடும்.

**இந்த திரைப்படத்தில் வியாஸெம்க்ஸியின் பங்களிப்பு எந்தளவில் இருந்தது?**

குறிப்பிட்டு சொல்லும்படியாக இல்லை. அவர் பல இயக்குனர்களுக்கு தனது புத்தகத்தின் உரிமத்தை அளிக்க மறுத்துவிட்டார். எத்தனை இயக்குனர்கள் என்கின்ற எண்ணிக்கை எனக்கு தெரியாது. நான் அவரை முதலில் அணுகியபோதும், எனக்கு உரிமம் தர முற்றிலுமாக மறுத்துவிட்டார். அவரை அணுகிய தருணத்தில், "இது மிகவும் வேதனையளிக்கிறது. ஏனெனில், அந்த புத்தகம் உண்மையில் நகைச்சுவை உணர்வுமிக்கது" என்றேன். உடனடியாக அதிர்வடைந்த அவர், "என்ன? எனது புத்தகம் உங்களுக்கு நகைச்சுவையாக இருக்கிறதா?" என்பதாக எதிர்வினை புரிந்தார். "ஆமாம். மிக நிச்சயமாக!" என்றேன். "நீங்கள் உண்மையாகவாக சொல்கிறீர்கள்? இதற்கு முன்பு ஒருவரும் இந்த வகையில் அந்த புத்தகத்தைப் பற்றி குறிப்பிட்டிருக்கவில்லை" என்றார். அதனால், நான் மீண்டும், "சத்தியமாக இந்த புத்தகத்தில் இருந்து நல்லதொரு நகைச்சுவை திரைப்படத்தை உருவாக்க முடியும்" என்றேன். அதன்பிறகு அவர் என்னை புரிந்துக்கொண்டார். முன்பு அவரை அணுகிய இயக்குனர்களின் வரிசையில் நான் இல்லை. நான் இயக்க விரும்புவது ஒரு நகைச்சுவை திரைப்படத்தை என்பதாக அவருக்கு தெளிவு உருவாகியது.

அதன்பிறகு நாங்கள் சந்தித்தோம். "சரி நான் உனக்கு இந்த புத்தகத்தின் உரிமத்தை கொடுக்கிறேன்" என்றார். ஆங், "கொடுக்கிறேன் அல்ல, விற்கிறேன்" என்றார் (சிரிக்கிறார்). "ஏன்" என்று நான் கேட்டேன். ஏனெனில், அதன்பிறகு அவரால் மறுப்பு கூற முடியாதல்லவா. வியாஸெம்க்ஸி, "தெரியவில்லை. ஆனால், நான் உன்னை நம்புகிறேன். நீ வேறொரு கிரகத்தில் இருந்து வந்திருக்கிறாய். உனது திரைப்படமாக்கல் உத்தி எனக்கு பிடித்திருக்கிறது. ஆனால், எனக்கு திரைக்கதையை எல்லாம் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டாம். உனது வேலையை எவ்வித இடறபாடுமின்றி செய்துமுடி. பிறகு, எனக்கு திரையிட்டு காட்டு. எனக்கு பிடிக்கவில்லையென்றால், நாம் அப்போது பார்த்துக்கொள்ளலாம்" என்றார்.

அவரது பெயரை நான் டைட்டிலில் குறிப்பிட்டிருக்கிறேன். அவ்வளவுதான். நான் எவ்வகையில் செயல்படப் போகிறேன் என்பதை நன்கு உணர்ந்திருந்ததால், எவ்விதமான அழுத்தங்களையும் எனக்கு அளிக்க அவர் விரும்பவில்லை. இதனால், எனது விருப்பத்தின்படி திரைப்படத்தை இயக்கும் சூழல் உருவாகியிருந்தது. முடிவடைந்த திரைப்படத்தை வியாஸெம்க்ஸி பார்த்தபோது மிகவும் நெகிழ்ந்துவிட்டார். அவரது வார்த்தைகள் இந்த படத்திற்குகிடைத்த மிகப்பெரிய ஆசியாக கருதுகிறேன். "நீ துயரார்ந்த கதையிலிருந்து, நகைச்சுவையை வெளிக்கொணர்ந்திருக்கிறாய்" என்றார். அதைதான் நான் பெரிதும் நேசிக்கின்ற அனைத்து இத்தாலிய நகைச்சுவை திரைப்படங்களும் செய்கின்றன.

திரையில் நான் வார்த்திருந்த கொடார்ட்டை அவரால் அடையாளம் கண்டுக்கொள்ள முடிந்தது. இத்தனை துல்லியமாக நாங்கள் கொடார்ட் கதாப்பாத்திரத்தை உருவாக்கியிருந்ததை அவரால் நம்பவே முடியவில்லை. தனது கதாப்பாத்திரம் சித்திரிக்கப்பட்டிருந்த விதத்தில்தான் அவருக்கு சில குழப்பங்கள் இருந்தது. அது இயல்பானதுதான். ஆனால், அவரால் கொடார்ட்டை அடையாளம் காண முடிந்தது, எனக்கு மிகப்பெரிய ஆறுதல் அளித்தது. அப்படியானால், அவர்களது உறவு அத்தனை சிறப்புமிக்கதாக இருந்திருக்க வேண்டும். அவருக்கான பிரத்யேக திரையிடலுக்கு பிறகு, வியாஸெம்க்ஸியை ஏமாற்றவில்லை என்கின்ற உணர்வு உறுதிமிக்கதாக எனக்குள் உண்டாகிப்போனது.

**கொடார்ட் இந்த திரைப்படத்தில் எவ்வித பங்களிப்பும் செய்யவில்லை என்பது லூயிஸுக்கு சாதகமாக அமைந்திருக்கிறது என்று சொல்லலாமா?**

நிச்சயமாக. அதாவது, அவர் படப்பிடிப்பு தளத்தில் இல்லையென்றாலும்கூட, நாங்கள் செய்து கொண்டிருந்தது அவரது அந்தரங்கத்துக்குள் தலையிடுவதைப்போலத்தான். அவரும் இதே வகையிலான பல செயல்களை செய்திருக்கிறார் என்பதால், நாமும் அவ்வகையில் செயல்படுவதில் பிழையொன்றும் இல்லை. ஏனெனில், நீங்கள் அவருக்கு மிகுதியான மரியாதையை செலுத்தப் போகிறீர்கள் என்றால், நிச்சயமாக அர்த்தமற்ற முட்டாள்தனமான செயலொன்றை செய்யப் போகிறீர்கள் என்று பொருள். துவக்கத்தில், நான் திரைக்கதையை எழுதும்போது, கொடார்ட் பங்கேற்கும் வகையில் ஒரு காட்சியை உருவாக்கிவிட நினைத்தேன். அவரும் 60களில் தனது திரைப்படங்களில் இதுபோன்ற பல பரீட்சார்த்த முயற்சிகளை புகுத்தியவர்தானே.

அவரது திரைப்படத்தின் மைய கதாப்பாத்திரங்களில் ஒன்று திடீரென ஒரு தத்துவவாதியை எதிர்கொள்ள நேரிடும். இருவரும் படத்துக்கு அவசியமில்லாத பல தத்துவாத சிக்கல் குறித்து சில நிமிடங்களுக்கு உரையாடிக் கொண்டிருப்பார்கள். சட்டென அந்த தத்துவவாதி மறைந்துவிட, கதாப்பாத்திரம் மீண்டும் கதையில் பங்கேற்க துவங்கிவிடும். அதனால், நான் கொடார்ட்டை பங்கேற்க செய்ய வேண்டும் என்று நினைத்தேன். லூயிஸும், கொடார்ட்டும் ஒரு காட்சியில் உரையாடுவதைப்போல எழுத துவங்கினேன். ஆனால், சில நிமிடங்களிலேயே எனக்கு புரிந்துவிட்டது அது மிகமிக அபாயகரமாக இருக்கப் போகிறதென்று. அவர் "இது முட்டாள்தனமானது, இது முட்டாள்தனமானது" என்று உரக்க குரலுயர்த்த ஆரம்பித்துவிடுவார். அவரது கண்ணோட்டத்தில் அவரது செயல் மட்டும் அறிவுஜீவித்தனமாக இருக்கும் (சிரிக்கிறார்). எனினும், நான் இந்த எண்ணத்தை துவக்கத்திலேயே கலைத்துவிட்டேன். எப்படியும் அவர் இதற்கு ஒப்புக்கொள்ளப்போவதில்லை என்பதை உணர்ந்திருந்தேன். நான் செவ்வியல் பிரதிப்போல இத்திரைப்படத்தை உருவாக்க விரும்பினேன்.

**கொடார்ட், "35 வயதில் மொஸார்ட் உயிரிழந்தது சரியானதுதான்" என்று சொல்லுவதன் வழியே உங்கள் திரைப்படம் துவங்குகிறது. அதன்பிறகு, முழு திரைப்படத்திலும் மாணவர்களின் நன்மதிப்பை பெற அவர் மேற்கொள்ளும் பிரயத்தனங்களை சுற்றியே கதை வளருகிறது. கொடார்ட் முதுமையை எய்திக் கொண்டிருப்பதால், தன்னால் இன்னமும்**



ழான் லூக் கொடார்ட், அன்னா வியாஸெம்ஸ்கி (1960)

இளைஞர்களுடன் இணக்கமாக நெருங்கிப் பழக முடியவில்லை என்கின்ற பயத்தை குறித்த துயரக் கதையை உருவாக்கியிருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா?

*நீங்கள் ஒரு புரட்சியாளராக உருவெடுக்க விரும்புகிறீர்கள் என்றால், இறுதியில் உங்களுக்கு இரண்டே முடிவுகள்தான் காத்திருக்கின்றன என்று கருதுகிறேன். ஒன்று, நீங்கள் சுதந்திர மனிதராக உருவெடுத்துவிடுவீர்கள். இல்லையென்றால் மரணத்தை தழுவி மண்ணுலகில் இருந்து மறைந்துப் போவீர்கள். உங்களை நீங்களே கொலை செய்வதற்கு முன்னிருத்துகிறீர்கள். இல்லையெனில், கணத்துக்கு கணம் புத்துயிர்ப்பு பெற விரும்புகிறீர்கள். இதுதான் கொடார்ட்க்கும் நிகழ்ந்ததென்று கருதுகிறேன். அவருக்கு இந்த பாதை மகிழ்வளித்ததா என்று தெரியவில்லை. ஆனாலும், அவர் ழான் லூக் கொடார்ட். அதுதான் அவர் தனக்கென தேர்வு செய்த பாதை.*

*முதுமையை எய்துவது மட்டுமே பிரச்சனையில்லை என்று நினைக்கிறேன். அதைவிடவும் ஆழமான சிக்கல்கள் இருக்கின்றன. எப்போதும் துடிப்புடனும், சுதந்திரமானவனாகவும், புரட்சியாளனாகவும் இருக்க விரும்புவது. உங்களுக்கே தெரியும். கொடார்ட் தனது முதல் திரைப்படத்தை 30 வயதில் உருவாக்கினார். அது திரையுலகில் மிகப்பெரிய புரட்சியை தோற்றுவித்தது. திரைப்பட வரலாற்றில் எப்போதுமே Breathlessக்கு முந்தைய காலம், Breathlessக்கு பிந்தைய காலம் என்று இருந்துக்கொண்டுதானிருக்கும். அதுபோலவே, கொடார்ட்க்கு முந்தைய காலம், கொடார்ட்க்கு பிந்தைய காலமென்பதும் இருந்துக்கொண்டுதானிருக்கும்.*

*ஏழு வருடங்களுக்கு பிறகு 'லா சைனீஸ்' திரைப்படத்தை உருவாக்கிக் கொண்டிருந்த காலத்தில், தானொரு புரட்சிகரமான திரைப்படத்தை வளர்த்தெடுத்துக் கொண்டிருப்பதாக கொடார்ட் கருதினார். ஆனால், யதார்த்தம் அவரது நினைப்புக்கு எதிராக அமைந்திருந்தது. அதனால், விரைவில் வேறொன்றை அவர் கண்டடைந்துவிட வேண்டியிருந்தது. அப்போது அவருக்கு 37 வயதாகியிருந்தது. அதனால், அவர் முதுமை குறித்தெல்லாம் அப்போது பெரிதளவில் கவலைகொண்டிருந்தாரா என்று எனக்கு தெரியவில்லை. பிரச்சினை இன்னமும் ஆழமானது என்றே கருதுகிறேன். அவரது படைப்புலகை எடுத்துப் பார்த்தீர்களென்றால் ஒவ்வொரு பத்து வருடத்துக்கும் ஒரு புது வகையிலான அணுகுமுறையை அவர் கொண்டிருந்ததை விளங்கிக்கொள்ள முடியும்.*

*களப்பணியாளர்கள், அரசியல் தொடர்பான திரைப்படங்களை 70களில் கொடார்ட் உருவாக்கினார். அதன்பிறகு மீண்டும் அவர், பெரிய நடிகர்களை கொண்டு செவ்வியல்தன்மையிலான திரைப்படங்களை இயக்கினார். 90களில் மீண்டும் வெவ்வேறு திரைப்படங்களை உருவாக்கினார். 2000த்தில் பல பரீட்சார்த்த முயற்சிகள் அவரிடமிருந்து வெளிப்பட்டன. 2010க்கு பிறகு தற்கால கலை வடிவத்தில் புதிது புதிதாக பரிசோதனைகளை நிகழ்த்திக் கொண்டிருக்கிறார். அதாவது, எக்காலத்திலும் ஏதேனுமொரு புதுமையை உருவாக்குவது அவரது வழக்கமாக இருக்கிறது. அதைத்தான் அவர் தேடிக் கொண்டிருக்கிறார் என்று நினைக்கிறேன்.*

உங்களுக்கு?

*ஆங். என்னை ஒரு புரட்சியாளனாக நான் ஒருபோதும் கருதியதில்லை (சிரிக்கிறார்). அதிகளவில் எளிமையை நாடிச் செல்லும் படைப்புகளையே உருவாக்கி வருகிறேன். அதோடு கூடுதலாக, சில செவ்வியல் படைப்புகளையும், நகைச்சுவை திரைப்படங்களையும் இயக்கிக் கொண்டிருக்கிறேன்.* ●

**ராம் முரளி** <raammurali@gmail.com>



# கருணாகரன் கவிதைகள்

### 1

அப்படித்தான் சொல்லிக் கொண்டிருந்தார்கள்
அதை வேறு எப்படிச் சொல்ல முடியும்? என்று
அவர்களுக்குத் தெரியாது
எனக்கும் தெரியாது

அது எவ்வளவு உண்மையென்று எனக்குத் தெரியவில்லை
ஏன் அவர்களுக்கும் அதைப்பற்றித் தெரியாது
ஆனாலது உண்மையாகவுமிருந்தது

பொய்யாகவுமிருந்தது

அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே
அது அப்படியே நிகழ்ந்து கொண்டிருந்தது
அப்படி நிகழ்ந்து கொண்டிருப்பது ஆச்சரியமா இல்லையா
எனத் தெரியவில்லை
ஆனாலது ஆச்சரியமாகவும் ஆச்சரியமற்றுமிருந்தது.

நிகழ்ந்துகொண்டிருப்பதை விவரிப்பது வேறு
விவரித்துக் கொண்டிருக்கும்போதே நிகழ்வது வேறு
என்று யாரோ சொல்லிக் கொண்டிருந்தனர்

அப்படியென்றால் நீ தீர்க்கதரிசியா குறிசொல்லியா
என்று யாரோ கேட்ட சத்தம் கேட்டது.

இப்படியெல்லாம் நடந்து கொண்டிருக்கும்போதுதான்
கடவுள் வந்து
நம்மோடு கூட இருந்து
ஒரு பிளா கள்ளுக் குடித்தார்
பிறகு கேட்டார்
“உமா மகேஸ்வரியின் கவிதைகளைப் படித்தீர்களா?”
என்று.

“சிவனே, இதுவென்ன கேள்வி
சக்தியின் பாதச் சுவடுகளை அறிந்த பிறவி நானன்றோ”
என்றான் மாயன்
“சிவ சக்தியை யானறிவேன்” என்றான் பதற்றத்தோடு
தாமரையான்
கெக்கட்டமிட்டுச் சிரித்த கடவுளின் கண்களிலிருந்து
நீர் தெறித்துக் கடலாகியது
“ஏது இந்தச் சிவ தாண்டவம்!” என்று கலங்கினேன் யான்.

“அதைப் பற்றி அவர்கள் அப்படித்தான் சொல்லிக்
கொண்டிருக்கிறார்கள்”
என்றார் கடவுள்.

“எதைப் பற்றி?” என்றான் மாயன்
“அதைப் பற்றித்தான்” என்ற கடவுளின் கண்களில்
கள் மலர்ந்து, மணம் வீசியது.

உமா மகேஸ்வரியின் கவிதைகள் வானெங்கும் பறந்து
நட்சத்திரங்களாகின
அந்த வானத்தின் கீழ்தான்
எங்களுடைய உலகம் அன்றிருந்தது.

### 2

பேச்சுகளின் பேரின்பத்தில்
நாங்கள் திளைத்துக் கிடந்த அன்றுதான்
துண்டிக்கப்பட்ட கைகளை மரமாக்கி நட்டவள்
நம்மைக் கடந்து சென்றாள்

அன்று அவள் நட்ட மரங்கள்
தெருநீளம் வளர்ந்து மலர்கின்றன
அவற்றின் நிழல்களும் கனிந்து வாசம் வீசுகின்றன
இதோ ஒரு மழைக்குடையாக



இன்று என் தலையின் மேலே சிறகு விரித்து நிற்கிறதே
ஒரு கை விருட்சம்

இந்த மரங்களிலிருந்து ஐந்தாறு சிறுவர்கள்
பழங்களைப் பறித்துண்கிறார்கள்.
கைகளின் வாசனை ததும்பும் பழங்களை
வியப்புடன் பார்க்கிறான் ஒரு சிறுவன்

அது துண்டிக்கப்பட்ட கையொன்றின் வாசனை என்று
அவனுக்கு யார் சொல்வது?
அந்தக் கைப் பெண் முகத்தை
யாரவனுக்கு அடையாளம் காட்டுவது?

வரலாற்றின் கண்களில் தவறிய
ஒளிமுகத்தை வைத்துக்கொண்டு
தடுமாறுகிறேன் நான்.
(யுத்தத்தில் கைகளை இழந்த பெண்களுக்கு)

### 3

விடுதலைக் கனவு அவனைப் பறவையாக்கியதற்கு
பறவையாகியவனின் சிறகுகள்
எல்லைகளைக் கடந்து
வானத்தையும் பூமியையும் அணைத்துக் கொண்டதற்கு
நான் சாட்சியாக இருக்கிறேன்

நாங்கள் சமாந்தரமான பயணிகளாக
பயணித்த தூரங்களெங்கும்
சனங்களின் துயரைத் தானியமாகத் தின்று
அந்தப் பறவை தன் சிறகுகளை விரித்ததைக் கண்டேன்

அவனோடொரு பெரும் பறவைக் கூட்டம்
பறவைக் கூட்டத்தோடவன்
என்றவாறாகச் சேர்ந்த பறவைகளிடம்
வானமும் பூமியும் வசமாயிற்று
வாழ்வும் நிலமும் அழகானது.

ஒருபோது போர்க்களம் அவனுடைய சிறகுகளை
அறுத்தபோது
கால்களற்றுப் பூமியில் நிற்கவே முடியாது சரிந்தான்

இனி நடக்கவும் முடியாமல்
விடுதலைக் கனவு அவனைச் சிறையிட்டதோ
என்ற மலைத்துயரில் மனதிடிய
கால்களற்றவனைப் பற்றிய என் உலகம் மூச்சடைத்தது.

கால்களற்றவனோ அதோ பறந்து செல்கிறான்
அவன் பறக்கும் திசையெங்கும்
ஒளிர்கின்றன பாதைகளும் கோலங்களும்.
(போராட்டக்களங்களில் கால்களற்றவர்களுக்கு) ●

**கருணாகரன்** <poompoom2007@gmail.com>

# எம். ரிஷான் ஷெரீப் கவிதைகள்

ஓவியம்: Albert Bierstadt



## 1. கடவுளின் சிறுவன்

நீரில் நிழலோவியங்களென மிதக்கிறது
தேவாலயத்தை நோக்கிச் செல்லக் கட்டப்பட்ட
வெண்பாலம்
பெருங்குளத்தின் மத்தியில்

ஆலயத்தின் செந்நிறத் தூண்கள்
வெயிலைக் கோதியெடுத்து
கடவுளின் கைகள் ஏந்தியிருக்கும் ஆயுதங்களினூடு
தண்ணீரில் தெளிக்கிறது
அந் நாளின் படையலை

எதற்கஞ்சிய கடவுள்
வாளேந்தியிருக்கிறதெனக் கேட்ட சிறுவன்
சிறு தட்டைக் கற்களை தரையில்
ஒன்றின் மேலொன்றாய் அடுக்குகிறான்

சிறுவன் நீங்கிச் சென்று
நீலப் பச்சைச் சிறகுகள் கொண்ட நீர் நாரை
நிழல் வழியே குறுகிக் கருவும்
மதியமுமாயிற்று

ஒரு வலிய கேள்விக்குறியென
ஆலய முற்றத்திலேயே கிடக்கின்றன
அத் தட்டைக் கற்கள்

## 2. வெப்ப மேய்ச்சல்

பாதி சிரைக்கப்பட்ட மயிர்க்கற்றை மேனியோடு
மேய்ச்சலுக்கு கிளம்பியிருக்கிறது செம்மறியொன்று

பனிக்காலத்தின் விடியலில்
சிலிர்க்கும் அதனுடல்
இலையுதிர்கால மரங்களை நினைவுறுத்தும்

உடலின் மொட்டைப் பாதியில்
ஊடுருவுகிறது கடுங்குளிர்

இளஞ் சூரியக் கீற்றுகள்
மலைச் சிகரப் பனியுருக்க
தெளிந்த நீரெனப் பாய்கிறது
மயிரடர்ந்த மீதிப் பாதிக்குமான
இத வெப்பம்
உடலெங்கும்

## 3. பாதசாரி மறந்த வீடு

பல கோடைகளை
அடை மழைகளை
பனிக் காலங்களைக் கண்டிருக்கும்
ஆதி வீடு
பாழ் மூடிக் கிடக்கிறது இன்னும்

ஓட்டுக் கூரையின் சிதிலங்கள் வழியாக
எப்போதும் வந்து செல்லும் மலைக் குரங்குகளும்
அண்டிய பெரு விருட்சங்களும்
சருகுகள், கனிகளோடு பருவ காலங்களை
வீட்டினுள்ளே காவி வருகின்றன

ராஜாளிக் கழுகொன்றின் இரைப் பார்வை
சர்ப்பங்கள் நெளியும்
வீட்டுக் கொல்லை கோழிக் கூண்டின் மீது
பதிந்தே கிடக்கிறது இப்போதும்




வெகு தொலைவுக்குச் சென்ற பாதசாரி
நடந்து கடக்கும் வெளி அனைத்திலும்
பிச்சைப் பாத்திரம் நிரம்பி வழிய
இரைகளென விழுந்து கொண்டேயிருக்கின்றன
கிராமத்து வீட்டை நினைவுறுத்தாக் காட்சிகளும்
புதுப் புது மொழிகளும் அனுபவங்களும்

விடிகாலை சூரியக் கதிர்கள்
ஒட்டடைத் தூரிகையால் வரையும்
மஞ்சள் கோட்டோவியங்களில் படிகின்றன
சாம்பல் புழுதியும் கிழச் சிலந்தியும்

ஓணான்கள் ஊர்ந்து திரியும்
பாழடைந்த வீட்டின் பலகை மேசை மீது
அடுக்கப்பட்டவற்றுள் ஆகவும் மேலேயிருந்த
புராதனப் புத்தகத்தின் அட்டையில்
இன்னும் புதிதாகவே இருக்கிறது
மீன்கொத்தியின் நேர் செஞ்சொண்டும்
நீலக் கரு இறகும் கொண்ட நீர்வர்ணச் சித்திரம்

## 4.இறகுதிர் காலம்

உஷ்ண காலங்களில் வழிந்தோடும்
ஓடைகள், நதிகளின் வைரம் பாய்ந்த
பலகைப் பாலங்களில் தரித்திருக்கும்
வேனிற் பறவைகள்
குளிரில் நடுநடுங்கியபடி பார்த்திருக்கின்றன
இரவிரவாய்ப் பொழிந்த வெண்பனி
மலையுச்சிகளில் நீராவியாய்ப் படிந்த அதிசயத்தை

மலைப் பாதையில் மெதுமெதுவாக நகர்கிறது
வாத்துக்கள், கோழிகள், ஆடுகள், முயல்களை
வாரச் சந்தைக்குக் கொண்டு செல்லும் பெருவண்டி
இலையுதிர்த்து வீற்றிருக்கும் தெருவோர மரங்கள்
பனி தெளித்து எழுப்பி விடப் பார்க்கின்றன
கொல்லப்பட்ட விலங்குகளை

எதிர்க்காற்றில் பறக்கும் அப் பிராணிகளின் இறகுகள்
அம் மரங்களைத் தடவும் அக் கணத்தில்
புதிதாகத் துளிர்க்கின்றன கிளைகள்
இறகுகளின் வர்ணங்களில் ●

**எம்.ரிஷான் ஷெரீப்** <mrishansha@gmail.com>

க.ப. அறவாணன்
(1941 - 2018)

# தமிழ்ப் புலமை மரபும் நாம் எதிர்கொள்ளும் சவால்களும்



ரவிக்குமார்

தமிழ் புலமை மரபின் தொடர்ச்சியைப் பேணிக்காத்து, அடுத்த தலைமுறையை உருவாக்கிய பேராசிரியர் அறவாணன் இயற்கைஎய்திவிட்டார். 2018ஆம் ஆண்டில் தமிழில் பல்வேறு துறைகளில் மாபெரும் பங்களிப்புகளைச் செய்த ஆளுமைகள் பலர் மறைந்துவிட்டனர். அந்த மறைவுகளால் ஏற்பட்ட வெற்றிடங்களை நிரப்பக்கூடிய ஆளுமைகள் நம்மிடையே இப்போது இல்லை என்பது மட்டுமின்றி, அடுத்த இருபது ஆண்டுகளில் அப்படியான ஆளுமைகள் தோன்றுவார்கள் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தக்கூடிய தடயங்களும் தென்படவில்லை. அதனால், அந்த இழப்புகள் எண்ணுந்தோறும் பெருகி வலியை, வேதனையை அதிகப்படுத்துகின்றன.

பேராசிரியர் அறவாணன் பல்துறை அறிவு கொண்டவராக இருந்தார். அயல்நாடுகளுக்குச் சென்று பணியாற்றும் வாய்ப்பைப் பெற்றதும், மானுடவியல் முதலான துறைகளைப் பற்றிய அவரது ஆழ்ந்த அறிவும், அவரை முக்கியத்துவம் வாய்ந்த ஆளுமையாக உயர்த்தின. தனிப்பட்ட வாழ்வில் அவர் கடைப்பிடித்த ஒழுங்கும் உழைப்பும் அவரது தோற்றத்திலேயே வெளிப்படும். தமிழ் மீது அவருக்கிருந்த பற்று 'அறவாணன் பள்ளி' என குறிக்கத்தக்க ஆய்வுக் குழாமை உருவாக்கியுள்ளது.

பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் நடைபெற்ற ஆய்வுகளை தற்போதுள்ள ஆய்வுச் சூழலோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது எந்த அளவுக்கு தமிழ் சரிவைச் சந்தித்திருக்கிறது என்பதை நாம் உணர முடிகிறது. இதற்குப் பல்வேறு காரணங்கள் கூறப்பட்டாலும், மொழிப்பற்று என்பது 'மொழி பக்தியாக' மாற்றப்பட்டு, அது அரசியல் கருவியாக சீரழிக்கப்பட்டது முதன்மையான காரணம் என ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். சங்க இலக்கிய ஆய்வுகளில் குறிப்பிடத்தக்க பங்களிப்புகளைச்செய்துவரும் ஈவா வில்டன் (Eva Wilden) அண்மையில் எழுதியுள்ள ஒரு நூலில் (Grammar of Old Tamil for students, IFP, 2018 ) இத்தகைய மொழி பக்தி எப்படி புறவயமான ஆய்வுகளுக்குத் தடையாக இருக்கிறது என்பதை சுட்டிக்காட்டி இருக்கிறார்.

"மொழி பக்தியின் காரணமாக வாய்ப்புகள் இருந்தும்கூட போதுமான அளவில் தமிழ் மொழி கற்பிக்கப்படவில்லை. இன்று மாணவர்களுக்குக் கற்பிப்பதற்கென்று நல்ல இலக்கண நூல்கள் இல்லை, கையேடுகள் இல்லை, தொகை நூல்களும் மிகச் சிறிய எண்ணிக்கையிலேயே கிடைக்கின்றன" என ஈவா வில்டன் வருத்தப்படுகிறார். "மதத்தைப்போல தமிழ் மொழிக்கும் ஒளிவட்டம் உருவாக்கப்பட்டிருப்பதால் அது கற்பதற்கானதல்ல, புகட்டப்படுவதற்கானது" என்ற கருத்து நிலவுகிறது என அவர் குறிப்பிட்டிருக்கிறார். "பெரும்பாலான தமிழர்களுக்கு தமிழ் என்பது உணர்வுசார்ந்த அடையாளமாக இருப்பதால், வேறுபட்ட பின்புலங்களைச் சார்ந்த மாணவர்கள் ஒரு வாக்கியத்தை எப்படிப் புரிந்துகொள்வது எனக் கேட்பதற்குக்கூட அச்சப்பட்டு, தாமே தெளிவற்ற முறையில் ஒரு அர்த்தத்தை உருவாக்கிக்கொள்ள" நேர்வதையும் ஈவா வில்டன் சுட்டிக்காட்டுகிறார்.

'தமிழ் ஒரு வாழ்க்கை வரலாறு' (Tamil - A Biography, The Belknap Press of Harvard University Press, 2016) என்ற முக்கியமான நூலை எழுதியுள்ள டேவிட் ஷுல்மன், அதேபோன்ற ஒரு கருத்தை அந்த நூலில் வலியுறுத்தி இருக்கிறார். மொழி தூய்மைவாதம் பேசுபவர்கள் தமிழில் நிகழ்ந்துவரும் ஆங்கிலக் கலப்பு குறித்து என்னதான் குறைபட்டுக்கொண்டாலும் தமிழின் எதிர்காலம் பிரகாசமாகவே இருக்கிறது என அவர் நம்பிக்கை தெரிவிக்கிறார்.

பேராசிரியர் அறவாணன், 'மணற்கேணி' ஆய்விதழுக்குப் பொதுக்கல்வி முறை பற்றி கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார். சங்க காலத்தில் பொதுக் கல்விக்கான அமைப்பு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை என அதில் குறிப்பிட்டிருந்தார். 'சேர, சோழ, பாண்டிய, கொங்கு மன்னர்கள் தம் ஆட்சி எல்லைகளில் கல்விக் கூடங்களை நடத்தியதற்கான சான்று இல்லை. சங்க காலத்தில் பொதுமக்கள் வந்து



பயிலுவதற்கான கல்விக்கூடங்கள் நம் முன்னோரால் அமைக்கப்படவில்லை; நடத்தப்படவில்லை' என்று அதில் குறிப்பிட்டிருந்தார். களப்பிரர், பல்லவர், பிற்காலச் சோழர், பிற்காலப் பாண்டியர், நாயக்கர் காலத்திலும் இல்லை. ஆனால், அந்த காலங்களில் பிராமணர்களின் வேத பாடசாலைகள் இருந்துள்ளன. அதற்கு அரசர்கள் தானம் அளித்துள்ளனர். வேதக் கல்வி புகட்டிய ஆசிரியர்களுக்கு வீட்டு மனைகூட தானமாக அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், பொதுக்கல்விக்கான பள்ளி எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை.

மௌரியன் பிராமி அறிமுகம் ஆவதற்கு முன்பே இங்கு எழுத்தறிவு இருந்துள்ளது. அதுவும் வெகு மக்கள் தமது பெயர்களைப் பானை ஓடுகளில், மட் கலங்களில் பொறித்து வைத்துக்கொள்ளும் அளவுக்கு எழுத்தறிவு பெற்றிருந்தனர். அகழ்வாய்வுகளில் கிடைக்கும் தமிழி எழுத்துப் பொறிப்புகள் அதைக் காட்டுகின்றன. ஆனால், அந்த எழுத்தறிவை எப்படிப் பெற்றார்கள் என்பது தெரியவில்லை. சங்க காலத் தமிழர்களிடையே பொதுக் கல்விக்கான அமைப்பு இல்லை என்று சொல்வதற்குப் புறவயமான பார்வை இருக்கவேண்டும். மொழி பக்தியிலிருந்து விடுபட்ட ஆய்வு மனோபாவம் இருக்கவேண்டும் அது பேராசிரியர் அறவாணனிடம் இருந்தது என்பதற்கு அந்தக் கட்டுரை ஒரு சான்று.

19ஆம் நூற்றாண்டில் தமிழ் புலமை மரபைப் பாதுகாத்து முன்னெடுத்துச் சென்ற மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, அவரது மாணவராக இருந்து மாபெரும் பங்களிப்பைச் செய்த உவேசா முதலான ஆளுமைகளுக்கு நிகராக சுட்டிக் காட்டக்கூடிய ஒருவர் கூட 21ஆம் நூற்றாண்டில் இல்லை என்பது துயரம் தோய்ந்த உண்மை. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் ஜமீன்தார்கள் முதலான புரவலர்களாலும் மடங்களாலும் ஆதரிக்கப்பட்ட அந்தப் புலமை மரபு பின்னர் காலனிய அரசாங்கத்தால் உருவாக்கப்பட்ட கல்வி நிறுவனங்களால் பாதுகாக்கப்பட்டது. காலனிய ஆட்சி உறுதிப்பட்ட போது தமிழ் புலமை மரபை ஆதரித்துவந்த புரவலர்களின் செல்வவளம் குன்றியது. அதனால், அவர்களின் வள்ளல் தன்மையும் வற்றத் தொடங்கியது. அப்போது உருவாக்கப்பட்ட கல்லூரிகள் பல்கலைக்கழகங்கள்தான் தமிழ்ப் புலமை மரபுக்கு ஆறுதலாக அமைந்தன. தனி நபர்கள், மடங்கள், கல்வி நிறுவனங்கள் என ஆதரவுபெற்று புலமை மரபு காப்பாற்றப்பட்டமைக்கு உவேசா அவர்களே சிறந்த சான்றாகத் திகழ்கிறார்.

19ஆம் நூற்றாண்டில் இருந்த புரவலர்கள், செல்வந்தர்கள் மட்டுமல்ல, தமிழில் ஆழ்ந்த அறிவு கொண்டவர்களாகவும் இருந்தனர். அறிஞர்களை ஆற்றுப்படுத்த கூடிய ஆற்றல் பெற்றவர்களாகவும் திகழ்ந்தனர். சேலம் இராமசாமி முதலியாரை உவேசா சந்தித்தபோது, “என்னென்ன நூல்களை படித்திருக்கிறீர்கள்?” என அவர் கேட்டாராம் அதற்கு, “20 அந்தாதிகள், 20 கலம்பகங்கள், 30 பிள்ளைத்தமிழ், 20 உலா, தூது நூல்கள் முதலானவை தமக்கு மனப்பாடமாகத் தெரியும்” என உவேசா பதிலளித்தாராம். “வேறு என்ன படித்திருக்கிறீர்கள்?” எனத் தொடர்ந்து கேட்டபோது, பெரிய புராணம் உள்ளிட்ட புராணங்களையும் கம்பராமாயணத்தையும் தான் வாசித்து இருப்பதாக அவர் கூறினாராம். அதைக்கேட்டும் ராமசாமி முதலியார் திருப்தி அடையவில்லை என்பதை உணர்ந்த உவேசா, “நீங்கள் என்னதான் எதிர்பார்க்கிறீர்கள்?” என்று அவரிடம்

கேட்டாராம். அதற்கு அவர், "சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் மணிமேகலை முதலான நூல்களை நீங்கள் வாசித்ததுண்டா?" என்று கேட்ட போது, "இல்லை" என உவேசா பதிலளித்தாராம். சீவக சிந்தாமணி பிரதி ஒன்றை அவரிடம் ராமசாமி முதலியார் கொடுத்ததுதான் உவேசாவின் ஆய்வின் திசையையே மாற்றியமைத்தது. அத்தகைய ஆற்றுப்படுத்தல் புலமை மரபில் முக்கியமானதாகும். அதை நிறுவனங்களுக்குப் பொருத்திப் பார்த்தால் ஒரு நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருக்கும் ஒருவர் கற்பனைத் திறனோடு, படைப்பூக்கத்தோடு இருப்பதுதான் அத்தகைய ஆற்றுப்படுத்தலுக்கு வழிவகுக்கும் எனக் கூறலாம்.

செவ்வியல் இலக்கிய ஆய்வு மரபுக்கு அப்பால் வரலாற்றுத் துறையில் மிக முக்கியமான பங்களிப்புகளைச் செய்த கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி குறித்து இங்கே நினைவு கூர்வது அவசியம். 1892இல் பிறந்த அவர் கல்வி பயின்று வட இந்தியாவில் சென்று பணிபுரிகிற நேரத்தில் அவரது ஆற்றலை உணர்ந்து, தாம் துவக்க இருந்த மீனாட்சி கல்லூரிக்கு முதல்வர் பொறுப்பேற்குமாறு அண்ணாமலை செட்டியாரால் அழைத்து வரப்பட்டார். அதை ஒரு பல்கலைக்கழகமாக உயர்த்திக் காட்டிய பெருமை நீலகண்ட சாஸ்திரியையே சாரும். அதன் பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பொறுப்பேற்று அவர் முன்வைத்த வரலாற்று ஆய்வுகள் இப்போதும் போற்றத்தக்கவையாக உள்ளன. பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு, மௌரியர் நந்தர் வரலாறு முதலானவை அவற்றுள் குறிப்பிடத்தக்கவையாகும். சோழர்கள் நூலின் முதல் பதிப்புக்கும் இரண்டாம் பதிப்புக்கும் இடையில் தெரியவந்த ஆய்வு உண்மைகளையெல்லாம் தனது நூலில் அவர் உள்ளடக்கியிருந்தார். அப்போதுதான் தஞ்சைப் பெரிய கோயிலில் இருக்கும் ராஜராஜன் காலத்து ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அது தொடர்பாக பரமசிவன் எழுதிய மிக முக்கியமான கட்டுரைகளை அவர் தனது நூலில் மேற்கோள் காட்டியிருந்தார். அத்தகைய ஆய்வு நாட்டம் வேட்கை நாம் பின்பற்றவேண்டியதாகும். அவரைப் போலவே வையாபுரிப்பிள்ளையின் பங்களிப்பும் கவனத்துக்குரியது. அவரது உழைப்பு இல்லை என்றால் நமக்கு தமிழ்ப் பேரகராதி கிடைத்திருக்காது.

காலனிய காலத்து கல்வி நிறுவனங்களில் இருந்த ஆய்வுத் தீவிரம் அதன் பிறகு சுதந்திர இந்தியாவில் உருவாக்கப்பட்ட கல்வி நிறுவனங்களில் இல்லாமல் போனது ஏன்? அதற்குக் காரணம் அரசியலாளர்கள் மட்டுமல்ல, அந்த நிறுவனங்களைப் பொறுப்பேற்று நடத்தியவர்கள்; அவர்கள் தொலைநோக்குப் பார்வை கொண்டவர்களாக இல்லாததுதான். வ.அய். சுப்ரமணியம் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஆரம்ப நிலையில் துணைவேந்தராக நியமிக்கப்படாமல் போயிருந்தால் அதற்கு அந்த அளவு நிலம்கூட கிடைத்திருக்காது. அவருக்குப் பிறகு துணைவேந்தர்களாக பொறுப்பேற்றவர்கள் அவரது கனவை விரிவாக்கக்கூடிய ஆற்றல் கொண்டவர்களாக இல்லை என்பது மறுக்க முடியாத உண்மையாகும். அறிஞர் அண்ணா அவர்களால் பெரும் கனவோடு உருவாக்கப்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் கலைஞர் அவர்களால் கொண்டுவரப்பட்ட செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனமும் அப்படித்தான் வீழ்ச்சியடைந்துள்ளன. ஒரு காலத்தில் காமில் சுவலபில் போன்ற அறிஞர்களின் கருத்தாழம் மிக்க ஆய்வு கட்டுரைகள் வெளியான உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் ஆய்விதழ் இப்போது எந்த தரத்தில் உள்ளது என்பதை இங்குள்ள ஆய்வு மாணவர்கள்கூட அறிவார்கள்.

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் குறித்து சில நாட்களாக நாளேடுகளில் செய்திகள் வருகின்றன. ஆரம்பத்தில் 25 கோடி ரூபாய் நிதி ஒதுக்கப்பட்ட அந்த நிறுவனத்துக்கு இப்போது இரண்டு கோடி ரூபாய் கூட ஒதுக்கப்படவில்லை என தமிழறிஞர்கள் பலரும் ஆதங்கப்படுவதைப் பார்க்கிறோம். இந்த நிலை கண்டிக்கத்தக்கதுதான். ஆனால், இதற்கு யார் பொறுப்பு? 25 கோடி ரூபாய் நிதி ஒதுக்கப்பட்ட போது அதை அந்த நிறுவனம் எந்த அளவுக்கு உருப்படியாக செலவு செய்தது? அங்கிருந்து எத்தனை தரமான ஆய்வுகள் வெளிவந்துள்ளன? என்ற கேள்விகளும் எழத்தான் செய்கின்றன.

நான் சிற்றிதழ்ச் சூழலிலும் கல்விப்புலச் சூழலிலும் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக செயல்பட்டு வருகிறேன். அதுபோலவே அரசியல் தளத்திலும் இயங்கி வருகிறேன். இந்தத் தளங்களில் நடப்பவை குறித்து ஆழ்ந்த ஆராய்ச்சியை நான் செய்யவில்லை என்றாலும் அவை குறித்த புரிதல் எனக்கு உண்டு. அந்தப் புரிதலின் அடிப்படையில் பார்த்தால் இன்று ஆய்வு நிறுவனங்கள் சந்தித்துள்ள வீழ்ச்சிக்கு பொறுப்பேற்க வேண்டியவர்கள் அந்த நிறுவனங்களில் தலைமைப் பொறுப்பேற்றவர்களே என்று நான் கூறுவேன்.

தமிழக அளவில் மெட்ராஸ் வளர்ச்சி ஆராய்ச்சி நிறுவனமும் (MIDS) , புதுச்சேரியில் உள்ள பிரெஞ்சு ஆய்வு நிறுவனமும்தான் (IFP) காத்திரமான ஆய்வுகளை மேற்கொள்வதற்கும் வெளியிடுவதற்கும் களம் அமைத்துத் தருகின்றன. தற்போது தமிழறிஞர்கள் எனக் குறிப்பிடத்தக்க கோ.விஜயவேணுகோபால், கி. நாச்சிமுத்து முதலானவர்களின் ஆராய்ச்சித் திறனைப் பயன்படுத்தக்கூடிய இடமாக பிரெஞ்சு ஆய்வு நிறுவனமே உள்ளது. தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களின் நம்பகமான மொழிபெயர்ப்புகள் இந்த நிறுவனத்தால்தான் வெளியிடப்படுகின்றன. கல்வெட்டியல் அறிஞர் எ.சுப்பராயலுவின் அனுபவத்தை, திறமையை அந்த நிறுவனம்தான் மதிக்கிறது, பயன்படுத்திக்கொள்கிறது. அதுபோலத்தான் எம்.ஐ.டி.எஸ். நிறுவனத்திலும் பொருளாதாரம், பண்பாடு, சமூகவியல் குறித்த ஆய்வுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அந்தப் பணிகளை ஏன் பிற நிறுவனங்களால் செய்ய முடியவில்லை என்ற கேள்வி எழுகிறது.

இதை தனிமனிதர்களின் குறைபாடாக நான் பார்க்கவில்லை. அப்படிப் பார்த்தால் யாரேனும் ஒரு அவதார புருஷர் வந்துதான் இந்தக் குறைகளைத் தீர்க்க முடியும் என்று முடிவு செய்து விடுவோம். மாறாக இது நமது சூழலின் விளைபொருள் என்றே நான் பார்க்கிறேன். அந்த சூழலின் செல்வாக்குக்கு ஆட்படாமல் அதிலிருந்து விலகி பணியாற்றினால் மட்டுமே







நமது தனித்துவத்தைக் காப்பாற்றிக்கொள்ளமுடியும். இப்போது நிலவும் பொதுப் போக்குக்கு மாறாக பேராசிரியர் ஒருவர் நினைத்தால் ஆற்றல் வாய்ந்த அடுத்த தலைமுறை ஆய்வாளர்களை உருவாக்க முடியும். அதற்கு பேராசிரியர் அறவாணன் ஒரு சான்று. அவரது மாணவரான அறவேந்தன், டெல்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைக்குப் பொறுப்பேற்று, நல்ல ஆய்வு மாணவர்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார். அது பெரும் நம்பிக்கையைத் தருகிறது.

இன்று தமிழ் மொழியும் தமிழ்ச் சமூகமும் எதிர்கொள்ளும் சிக்கல்களுக்கான தீர்வுகளை முன்வைக்கும் ஆய்வுகள் வெளிவரவேண்டுமென்றால் அதற்கு பல்துறை சார்ந்த அறிவும் ஒருங்கிணைந்த முறையில் அவற்றைப் பயன்படுத்தி ஆராய்கிற திறனும் வேண்டும். அப்படியான பார்வை அயல்நாட்டவர்க்குத்தான் இருக்கிறது என நான் கூறவில்லை. இந்த மேடையில் வீற்றிருக்கும் இந்த நிறுவனத்தின் இயக்குனர் பக்தவத்சல பாரதியும் அத்தகைய ஆய்வுகளை முன்வைத்து வருகிறார். அப்படி மேலும் சிலரை நாம் சுட்டிக்காட்ட முடியும்.

தற்போது தொல்லியலில், வரலாற்றுத் துறையில்; பொருளாதாரம், அறிவியல் முதலான துறைகளில் ஏற்பட்டுவரும் மாற்றங்களை உள்வாங்கி இலக்கிய ஆய்வுகளை நாம் மேற்கொள்ளவேண்டும். தொழிற்புரட்சியின் விளைவே நவீனத்துவம் என்பார்கள்; தொழில்மயத்துக்குப் பிறகான சிக்கல்களை விளக்குவதற்காகவே பின் நவீனத்துவ சிந்தனைகள் உருவாயின. இப்போது 'டிஜிட்டல் யுகம்' என சொல்லப்படும் எண்வயத் தொழில்நுட்ப யுகத்தில் நாம் வாழ்கிறோம். இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழிற்புரட்சி இந்தியாவை வந்துசேர்வதற்கு நீண்டகாலம் பிடித்தது. ஆனால், 'டிஜிட்டல் புரட்சியோ' அமெரிக்காவில் நிகழும் அதே நாளில் இங்கும் நிகழ்கிறது.

தொழிற்புரட்சி காலத்திய அச்சுத் தொழில்நுட்பம் சமூகத்தின்மீது, பண்பாட்டின்மீது ஏற்படுத்திய தாக்கங்களை ராபர்ட் டார்ண்டன், ரோஜெ ஷாத்தியெ முதலான 'புத்தக்கங்களின் வரலாற்றறிஞர்கள்' விளக்கியுள்ளனர். இப்போதைய டிஜிட்டல் தொழில்நுட்பத்தின் தாக்கங்களை மேலை நாடுகளில் பல சிந்தனையாளர்கள் ஆராய்கின்றனர். ஆனால், நமது கல்விப் புலங்களில் அதைப்பற்றிய தகவலறிவுகூட இல்லாத நிலையே காணப்படுகிறது.

'தொடுதிரை காலத்தின்' தத்துவம் எது? என்ற கேள்விஇப்போதுநமக்குமுன்னால்நிற்கிறது.அதற்கான விடைகளைக் கண்டறிவதே நமக்கு முன்னாலிருக்கும் சவால். அந்த சவாலை எதிர்கொள்வதே பேராசிரியர் அறவாணனுக்கு நாம் செலுத்தும் மெய்யான அஞ்சலி. அதைச் செய்ய பாத்தியதைப்பட்டவர்கள் அவரது மாணவர்கள் மட்டுமல்ல. அவரிடம் நேரடியாகக் கல்வி பயிலவில்லையென்றாலும் என்னையும் அவரது மாணவர்களில் ஒருவராகவே சிலம்பு செல்வராசு குறிப்பிட்டார். அது உண்மைதான், நானும் அவரை எனது ஆசிரியர்களில் ஒருவராகவே கருதுகிறேன். அவரைப் போலவே தமிழ் மொழி மீது, தமிழ்ச் சமூகத்தின்மீது பற்றோடு இருப்போம். நம் காலத்தின் சவால்களை எதிர்கொள்ளும் ஆய்வுகளை முன்வைப்போம்.

**ரவிக்குமார்** <kmkoilmla@gmail.com>

(15.02.2019 அன்று புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தில், இரத்தினவேலு முதலியார் வேங்கடேசன் அறக்கட்டளை சார்பில் ' அடுத்த தலைமுறைக்கு அறவாணர் சிந்தனைகள்' என்னும் தலைப்பில் நடத்தப்பெற்ற நிகழ்வில் ஆற்றிய உரையின் சுருக்கம்)

# நான் இருக்கிறேன்; நான் இருக்கிறேன் என்பது தெரியாமலே இருக்கிறேன்



லக்ஷ்மி மணிவண்ணன்

எதையாவது சொல்லட்டுமா? அழகியசிங்கர்; பக்கம் 108, விலை ரூ. 90; நவீன விருட்சம் வெளியீடு, தொலைபேசி: +91 91766 13205

கவி ஆத்மாநாமின் இந்த தலைப்பு வரி அழகியசிங்கரின் சுபாவத்திற்கு கச்சிதமாகப் பொருந்தக் கூடியது. ஆத்மாநாம் உட்பட அசோக மித்திரன், ஞானக்கூத்தன், பிரமிள் , நகுலன் என ஏராளமான இலக்கியவாதிகளின் இனிய நண்பர் அழகியசிங்கர். இது ஒரு வரியில் சொல்லிக்கொள்வது போல எளிமையான காரியம் அல்ல. ஞானக்கூத்தன் பேரில் மிகுந்த அபிமானம் கொண்டவர். கூச்ச சுபாவம் அவருக்கு இயற்கையானது.

அழகியசிங்கரை கவியாக,நவீன விருட்சம் இதழ் ஆசிரியராக , நூல் பதிப்பாளராக பலவிதங்களில் ஏற்கனவே அறிமுகம்தான். ஆனால், அவருடைய மொழிபெயர்ப்பில் ஓரியண்ட் லாங்க்மென் வெளியீடாக வந்த ஐராவதி கார்வேயின் 'யுகாந்தா: ஒரு யுகத்தின் முடிவு' வழியாகவே அவர் மீது மதிப்புகொண்டேன். ஏனெனில், அந்த நூல் எனக்கு மிகவும் முக்கியமாக அமைந்த நூல். அந்த நூலைப் பற்றி, கட்டுரை வடிவில் அமைந்த புனைவு என்று சொல்லலாம். அந்த நூலைப் பற்றி எழுதியிருக்கிறேன், பல சமயங்களில் நண்பர்களோடு பேசி யிருக்கிறேன். தமிழ்நாட்டில் பிறந்தவர்களுக்கு துரதிர்டவசமாக காப்பியங்கள் , பெருங்காப்பியங்கள் பேரில் ஒரு விரோத மனோபாவம் இளமையில் உருவாகிவிடும். வெளியில் உள்ள அரசியல் காரணிகளால் உருவாக்கி வரக் கூடியது இது. எவ்வளவோ புனிதங்களை தூக்கி 'மடார் மடார்' என்று உடைத்த வரலாறு கொண்ட மனம் அல்லவா நம்முடையது? எனக்கும் எதற்கென்றெல்லாம் தெரியாது. மகாபாரதம் பேரில் நிரந்தர பகை இருந்தது. இங்குள்ள அனைத்து விதமான தீமைகளுக்கும் மகாபாரதத்திற்கும் ஒரு தொடர்பு உண்டு என கங்கணம் கட்டி வைத்திருந்தேன். இதற்கு என்ன ஆதாரம் என்றால் ஒன்றும் கிடையாது. தெருக்களில் இருந்து நமக்குள் வந்து விழுகிற விதைகளில் பலதும் இப்படியாக வளர்ந்து விருட்சம் ஆகிவிடுதல் உண்டு. இவற்றை பின்னர் தறித்து அகற்றுதல் கடினம். ஏராளம் வேர்களை மனமெங்கும் பரப்பி வியாபித்து நின்று கொண்டிருக்கும். இவற்றை பின்னர் பெரும் படைப்புகள் மூலமாகவே சரி செய்ய இயலும்.

'யுகாந்தா' சிறிய நூல்தான். ஆனால், எனக்கு அது பெரும்படைப்பு. எனக்குள் இருந்த தேங்கிய எண்ணங்களை அப்படியே தலைகீழாக்கி மறுபடைப்பு செய்த நூல். மகாபாரதம் குறித்த எனது அசட்டுத்தனமான, பாமர எண்ணங்கள் அனைத்தையும் துடைத்தகற்றிய நூல். தெரு அரசியல்வாதிகள் படைப்பாளிகளைக் கண்டு அஞ்சுவதும் அவதூறு செய்வதும், கூடித் தாக்க முற்படுவதும் தவறானவை என்றெல்லாம் சொல்வதற்கில்லை. மிகச் சிறிய நூல்கள்கூட பல சமயங்களில் நம்மை முழுவதுமாக மாற்றியமைத்துவிடக் கூடியவை.

அதன் பின்னரே பாரதியின் பகவத்கீதையைப் படித்தேன். அந்த நூலைப் படிக்கையில் ஐராவதி கார்வேயின் அளவிற்கு அழகியசிங்கர் மனதில் உயர்ந்திருந்தார். அழகியசிங்கரின் உரைநடையை எனக்கு வாசிக்கப் பிடிக்கும் . இந்த கட்டுரைகளை 'அம்ருதா' இதழில் இவை வெளிவந்த காலத்தில் ஏற்கனவே படித்திருக்கிறேன். அதற்கு விஷேசமான காரணங்கள் ஏதுமில்லை. இதழில் வேறு பக்கங்களை படிக்காமல் விடும் சமயங்களில்கூட இவருடையதைப் படித்துவிடுவேன். அதில் கூச்சம் இருக்கும், சுய எள்ளல் இருக்கும், ஒரு வினோதமான சோகம் இழையோடும். இவற்றையெல்லாம் காட்டிலும் அதில் ஒரு சுகம் இருக்கும். அது அவருடைய உரைநடை , அவருடைய பொய்யின்மை.

இப்படியான உரைநடையை பெரும்பாலான புதிய தமிழ் கவிகள் எழுதுவதில்லை. புதிய



தலைமுறையில் ஷங்கர்ராமசுப்ரமணியனின் உரைநடை முக்கியமானது. 'கலை பொதுவிலிருந்தும் தனித்திருக்கும்' என்ற அவருடைய கட்டுரை நூலில் சிறப்பான உரைநடை அவருக்கு அமைந்திருக்கிறது . அதற்கு போலியான வேஷங்கள் கிடையாது. கவியின் உரைநடை திராபையாகக் கூட இருக்கலாம். ஆனால், அது அவனுடையதாக இருந்தாக வேண்டும். பாரதியெல்லாம் செல்வச் செழிப்பான உரைநடையை எழுதியிருக்கிறான். விக்ரமாதித்யனின் உரைநடை மேம்போக்கில் திராபை போல தோன்றும் ஆழம்கொண்டது. இலைமறைவில் நின்று கொண்டிருக்கும் நீர்ச்சுழி போலும் . சில கவிகள் தத்துவவாதிகளுக்கான உரைநடையை எழுதுகிறார்கள். சிலர் பேராசிரியர்களைப் போல எழுதுகிறார்கள். கவியாக இருப்பதில் அவர்களுக்கு சுகமில்லை. நமக்கு முந்தைய தலைமுறை இத்தகைய சிக்கல்கள் ஏதுமற்றது. ஞானக்கூத்தனோ பிரமிளோ அவரவர்களுடைய உரைநடையையே எழுதியிருக்கிறார்கள். மோஸ்தர்களின் படுக்கையறையை அவர்கள் உற்றுப் பார்த்த உரைநடையல்ல அவை.

அழகியசிங்கரின் இந்த கட்டுரை நூலில் அவர் பல எழுத்தாளர்களை உடனிருந்தும் வியப்புடனும்

அருகிருந்து பார்த்தவர் என்பதால் அவர்களை பற்றி சிலநுட்பமான தகவல்கள், செய்திகள் போகிறபோக்கில் வந்து செல்கின்றன. ஸ்டெல்லா புரூஸ், மனைவியின் நகைகளை திருப்பதி உண்டியலில் போட்டுவிட்டு தற்கொலை செய்துகொண்டதை விளங்கிக்கொள்ளவே முடியவில்லை. நகுலன், சென்னையில் நண்பரை பார்க்க கிளம்பி பார்க்காமல் விடுவது ஒரு கவிதை போலவே உள்ளது. பிரமிள் சொன்னதாக இந்த நூலில் வருகிற விஷயம் புதுமையானது.

“புத்தரைவிட கிருஷ்ண மூர்த்தி மேலானவர். அவருடைய தத்துவம் நவீனத்துவமானது. புத்தரையெல்லாம் ஒன்றுமில்லாமல் செய்துவிட்டார்” என்று பிரமிள் குறிப்பிட்டதாக வரும் தகவலில் அழகியசிங்கரின் நம்பகத்தன்மையும் கலந்திருக்கிறது. அவர் அவ்வாறு தடாலடியாகசொல்லக்கூடியவர்தான் என்பதே எனது எண்ணமும். சாது அப்பாத்துரையார் பற்றி பிரமிள் எழுதியிருக்கும் நூலிலும் இது போல குண்டலினி யோகம் ஒரு கற்பனை, வெற்று பாவனை என குறிப்பிட்டிருப்பார். குண்டலினி யோகம் பாவனைத்தான், கறபனைதான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எல்லா பாவனைகளும் கற்பனைகளும் உள்ளடக்கத்தை நோக்கி செலுத்தும் ஆற்றல் கொண்டவை என்பதில் அவர் சுணங்கியிருப்பார்.




இந்த நூலின் தளம் சாதாரணமான மனிதன் ஒருவனின் அன்றாட வாழ்வுடன் தொடர்புகொண்ட சாதாரணமான தளம்தான். அழகியசிங்கரிடம் உள்ளார்ந்து சன்னமாக வெளிப்படும் சுயபகடி ஒன்றிருக்கிறது. அசோகமித்திரனிடம் வெளிப்படுவது போன்ற வேறொரு வகை இது. அது மதிப்புடன் நகரும் பேருருவங்கள் அத்தனையையும் சிற்றுருவங்களாகவும் மாற்றுகிறது.

“கிருஷ்ணமூர்த்தி சென்னைக்கு வரும் போதெல்லாம் சென்னை கலகலவென்றிருக்கும்”, “சைக்கிள் ஓட்டத் தொடங்கும் போது கனவு வரும்” என்பது போன்ற குழந்தைக் கணங்கள் நிறைந்த கவித்துவ தருணங்களும் சுகமானவை.

ஆழ்ந்த துயரை ஏற்படுத்துகிற கட்டுரை ஒன்று இருக்கிறது. ‘அம்ருதா’ இதழில் இந்த கட்டுரையைப் படிக்கும் போதே மிகுந்த கலக்கத்தை ஏற்படுத்தியது அது. மனைவிமார்களுக்கும் புத்தகங்களுக்கும் இடையிலான வெறுப்பு பற்றி பேசுகிற கட்டுரை அது. ஏன் இப்படியிருக்கிறது? நிறைய நண்பர்களிடம் இந்த கட்டுரை பற்றி பகிர்ந்திருக்கிறேன். உலகில் எல்லா இடங்களிலும் இப்படித்தான் இருக்குமா? இல்லை இந்த பிரத்யேக சுபாவம் நமக்கு மட்டுமே உரியதா? எனக்கு புத்தகங்களை சேகரிக்கும் பழக்கம் கிடையாது. அவ்வப்போது அவை என்னைவிட்டு அகன்று விடும். என்றாலும், நான் செல்ல கூடிய வீடுகளில் ஒன்றிரண்டு நல்ல புத்தகங்களையேனும் கண்ணில் காணவில்லையெனில் இந்த வீடும், அங்கிருக்கும் குழந்தைகளும் எவ்வளவு துரதிஷ்டவசமானவை என நினைத்துக்கொள்வேன். நமது பெண்கள் புத்தகங்களையும் எழுத்தையும் லௌகீகத்திற்கு எதிரான விஷயங்களாக நோக்குகிறார்கள். அதற்கு அவர்களை பிழை சொல்ல ஒன்றுமில்லை. அவர்களை அவ்வாறு எடுத்துக்கொள்ளவே பழக்கி வைத்திருக்கிறார்கள். புத்தகங்கள் அற்ற, எழுதிற்குத் தொடர்பற்ற இல்லங்களிலிருந்து புதிய வம்சங்கள் தோன்றுவதில்லை என்பதை அவர்கள் ஏதோ ஒருவிதத்தில் உணரத் தவறுகிறார்கள்.

“நான் புத்தகம் வைத்துக்கொள்ளும் அறைக்கு என் மனைவி வந்தால் போதும் தலையில் அடித்துக்கொள்வார் . என் மனைவிக்கு ஹிஸ்டிரியா நோய் வந்துவிடும் . அன்று முழுவதும் மனைவியின் வசவுகளிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது” என்று எழுதுகிறார், அழகியசிங்கர் . இந்த வரியில் நாளெல்லாம் பட்டதன் பாரம் இறக்கி வைக்கப்பட்டு, பெருமூச்சு விடுகிறது.

புத்தக சேகரிப்பு பற்றிய சுவையான பத்தி ஒன்றில் இவ்வாறு எழுதுகிறார் அழகியசிங்கர்: “நானும் அவரைப் போல புத்தகம்சேகரிப்பவன். எங்கு பார்த்தாலும் புத்தகம் வாங்கிக்கொள்ளும் நான் புத்தகத்தை எடுத்து அவ்வளவு எளிதில் படித்துவிட மாட்டேன். பிறகு படிக்கலாம் நம்மிடம்தானே அந்த புத்தகம் இருக்கிறது என்ற நினைப்பில் இருப்பவன். சில சமயம் நான் வாங்கிய புத்தகத்தையே திரும்பவும் வாங்கிவிடுவேன்.”

சில புத்தகங்களை நானும் பலமுறை வாங்கியிருக்கிறேன். ஒருமுறை வாங்கியதை எவரிடமேனும் கொடுத்திருப்போம், இல்லை எடுத்துச் சென்றிருப்பார்கள். அவை உடன் இல்லையானால் பல் துலக்கவில்லையெனில் எப்படியான உணர்வு இருக்குமோ அப்படியிருக்கும்.

“என்ன சார் புத்தகம் வைத்துக்கொள்ளக் கூடாதென்று சொல்லிவிட்டார்களா? இதிலிருந்து ஒன்று தெரிகிறது. வீட்டைத் தவிர தனியே ஒரு ஆபீஸ் வைத்துக்கொள்ள வேண்டும்.” இதுவும் இதே கட்டுரையில் வருகிற ஒரு பகுதியே. மௌனமாக ஒரு துயரை எதிர்கொள்ள வைக்கும் பகுதி இது.

அழகியசிங்கரைப் பற்றி சொல்ல வேண்டுமானால் மீண்டும் ஆத்மாநாமின் தலைப்பு வாக்கியத்திற்கே திரும்ப வேண்டும். “நான் இருக்கிறேன்; நான் இருக்கிறேன் என்பது தெரியாமலே இருக்கிறேன்.” இப்படி பலர் இருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் பிறருக்கு அடித்தளம் ஆகிறார்கள்.

அவர் என்னிடம் இதனை எழுதக் கேட்டதை அவருடைய ஆசீர்வாதமாக எடுத்துக் கொள்கிறேன். ●

**லக்ஷ்மி மணிவண்ணன்** <slatepublications@gmail.com>

(‘எதையாவது சொல்லட்டுமா’ புத்தகத்துக்கு எழுதப்பட்ட முன்னுரை)

# டி. கண்ணன் கவிதைகள்

## 1

ஆசிரியையின் மாணவி
அன்றணிந்த குறைந்த வேலைப்பாடுகளுடன் கூடிய
யானைக்கலர் சுடிதாரில் அவளுக்கு பரம திருப்தி
சற்றே கர்வமும் கூட...
இரண்டு சக்கர வண்டியை புறக்கணித்து விட்டு
ஏற வேண்டிய பேருந்திற்கு
வீதி வழி நின்றும் நடந்தும்
விரைந்து கொண்டிருக்கிறாள்
தடாக மீன்கள் அவளைத் துரத்திக்கொண்டு வருகின்றன
அவற்றை தொடர்ந்து இலைகளின் கிளிகள்
சாலை விரைகின்றன
மிதிவண்டிகளின் மணிக் கூச்சல் வீதி நிறைகிறது
கவிழ்ந்த முக்கோண வழி
வலதுபுறம் பயணிக்க காலத்தின்
வேறொரு வீதி முளைக்கிறது
கிளிகள் திசை மாறுகின்றன
கூடவே மீன்களும் சைக்கிள்களும்
நடை திறக்க அவள் பள்ளிப் பேருந்து ஏறிவிட்டாள்

## 2

அவ்வாறே.
சுரங்கங்களால் அழுகுகிறது மலை
வெண் சீழ் அருவி கலக்கிறது
சீழ் நீரை நக்கிய விருட்சங்கள் ஓங்கி வளர்கின்றன
நீர் அணையடைய... தடுமாறும் மாநிலங்கள்
தேங்கிய நீர் ஓரிரவில் நிலவு பின்னணியில் வடிய...
முளைக்கின்றன அணையில் லட்சக்கணக்கில் சீழ் மரங்கள்
வாசம் வானமழிக்கிறது



## 3.

அது ஒரு விளையாட்டு
நான் விளையாடவில்லை...
ஜெயித்துக்கொண்டே இருந்தேன்
ஆசையில் விளையாட்டில் புகுந்தேன்
தோற்கத் தொடங்கினேன்

## 4.

பூத்துக் குலுங்கும் நிழல்களின் தோட்டம்
நிழல்கள் யாவும் இலைகள்
நிழல்களில் தவ்வி மறைகின்றன அணில்கள்
விழும் நிழல்
இலைகளின்
அகமா?
புறமா? ●

‘**டி. கண்ணன்**‘ <krishnaswamy164@gmail.com>

# ஜார்ஜ் பெர்னாண்டஸும் வெங்கட்சாமிநாதனும்!



ஸிந்துஜா

அனைத்திந்திய ரயில்வே தொழிற் சங்கங்கள் இணைந்து, ஜார்ஜ் பெர்னாண்டஸ் தலைமையில் நடத்திய வேலை நிறுத்தம் காரணமாக, 1973ம் வருஷம் டிசம்பர் மாதம் 19ம் தேதி அதிகாலை முதல் நாடெங்கும் ஓடிக் கொண்டிருந்த ரயில்கள் அந்தந்த இடங்களில் நின்றுவிட்டன அல்லது மிக மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தன. அப்போது ஜி. டி. எக்ஸ்பிரஸ்ஸில் சென்னையிலிருந்து புது தில்லிக்குப் போய்க் கொண்டிருந்த பயணிகளுள் நானும் ஒருவன்.

எனதுமுதல்வேலையைஒப்புக்கொள்ளப் போய்க் கொண்டிருந்தேன். நான் வளர்ந்த ஊரான மதுரையிலிருந்து, வெளியே அவ்வளவு தூரம் பயணம் செய்வது அதுதான் முதல் தடவை. 1965ல் ஹிந்தி வேண்டாம் என்று படிக்க மறுத்ததற்கு இப்போது அப்பாஷை என்னைப் பழி வாங்கக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறது என்று மனதின் மூலையில் சிறிய பயம் . தெரியாத ஊர், சொந்தம் என்று யாரும் இல்லை. நண்பர் ஒருவர்தான் தில்லியில் ஸ்டேஷனுக்கு வந்து அழைத்துப் போகிறேன் என்று சொல்லியிருந்தார்.

காலை நாலு மணிக்கே உட்கார்ந்திருந்த பெட்டியில் சலசலப்பு ஏற்பட்டுவிட்டது. புகை வண்டி கட்டைவண்டிக்கு சவால் விட்டுக்கொண்டு நகர்ந்து கொண்டிருந்தது. எட்டு மணிக்கு தில்லியில் இருக்க வேண்டிய வண்டி, ஆக்ராவில் இருந்தது. காபி, டீ, ஏன் தண்ணீர் கூடக் கண்ணில் படவில்லை. ஆக்ராவைத் தாண்டியதும் வண்டி நின்றுவிட்டது. எங்கள் பெட்டியில் இருந்த முக்கால் வாசிப் பேர்கள் தமிழர்கள் . என் அருகில் இருந்த இளைஞன், “அமிர்தசரஸில் விமானப்படையில் வேலை பார்க்கிறேன். வண்டி சரியான நேரத்துக்கு தில்லி செல்லாததால், அமிர்தசரஸ் வண்டியைப் பிடிக்க முடியாது” என்று சொன்னான்.

எதிரில் இருந்த ஒரு பாட்டி, தன் மகளோ மாப்பிள்ளையோ தில்லி ஸ்டேஷனுக்கு வந்து கூட்டிப் போவார்கள் என்று சொல்லிக் கொண்டிருந்தாள். நான் என் நண்பர் எனக்காகக் காத்திருந்து படப் போகும் கஷ்டத்தைப் பற்றி வருந்திக் கொண்டிருந்தேன். (இதற்கு இருபது வருஷம் கழித்துதான் மொபைல் போன் இந்தியாவில் புழக்கத்துக்கு வந்தது)

வண்டி மறுபடியும் கிளம்பி மெதுவாகச் சென்றது. அவ்வப்போது கொஞ்சம் வேகம் எடுத்து விரைந்த போது கவலை படிந்த முகங்களில் பிரகாசம் எழுந்தது. ஜார்ஜ் பெர்னாண்டஸ் எல்லோர் வாயிலிருந்தும் சாபம் பெற்றுக் கொண்டிருந்தார். தில்லி ஸ்டேஷனுக்கு சில மைல்கள் தள்ளி ஒரு பிரிட்ஜ் அருகே வண்டி நின்றுவிட்டது.

நூற்றுக் கணக்கான பேர் தத்தம் பெட்டியிலிருந்து இறங்கி, ரயில் பாதையை ஒட்டி நடந்தார்கள். ஒண்டிக் கட்டைகள் சரிவுப் பாதைகளில் இறங்கி சாலையை அடைந்தார்கள். நான் இருந்த பெட்டி யிலிருந்து ஒவ்வொருவராக இறங்கிப் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்து எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. கையில் நண்பரின் வீட்டு விலாசம் இருந்தது. எப்படி அங்கே செல்வது? டாக்சி அல்லது ஆட்டோவில் செல்வது என்றால் ஊரைச் சுற்றிக் காண்பித்து பணத்தையும் வாங்கிக்கொண்டு எங்கேயாவது இறக்கிவிட்டுப் போய்விட்டால்?

அப்போது அமிர்தசரஸ் பையன், பெட்டியில் இருந்த மூதாட்டியை அவள் வீட்டில் இறக்கிவிட்டுப் போக உதவுவதாகத் தெரிவித்தான். பண்டோரா ரோடு என்று அவள்சொன்னாள் அவன்என்னையும்அங்கே இறக்கிவிட்டு விடுவதாகவும் அங்கிருந்து ஏதாவது டாக்சியைப் பிடித்துக்கொண்டு போகுமாறும் சொன்னான். பண்டோரா ரோடில் இறங்கினேன்.

காலை பதினொறு மணிக்கும் சூரியனைக் காணோம். எதிரில் வந்த ஒரு டாக்சியைநிறுத்தினேன். சர்தார்ஜி டிரைவர். அவர் எங்கே போக வேண்டும் என்று ஹிந்தியில் கேட்டார். நான் ஆங்கிலத்தில் போக வேண்டிய இடத்தை சொன்னேன். இடத்தின் பெயர் உச்சரிப்பு சரியாக இருக்காதோ என்ற சந்தேகத்தில் நண்பரின் கடிதத்தைக் காண்பித்தேன்.

வண்டியில் போகும்போது அவ்வளவு பயத்திலும் மனக் குழப்பத்திலும் புது தில்லியின் வசீகரம் மனதில் அழுத்தமாகப்





பதிந்துவிட்டது. வண்டி செல்லும் பாதைகளிலும் சாலை ஓர மரங்களிலும் வெள்ளையடித்தாற் போல பனி பரவியிருந்தது. என்ன அகலமான சாலைகள்! என்ன கம்பீரமான மரங்கள்! மதுரையில் வாங்கி இருந்த ஸ்வெட்டரின் பலகீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு குளிர் உடம்பின் உள்ளே ஊடுருவி நரம்புகளைக் குசலம் விசாரித்துக் கொண்டிருந்தது. சர்தார்ஜி என் நடுக்கத்தைப் பார்த்து திறந்து வைத்திருந்த காரின் ஜன்னல்களை மூடினார்.

டாக்சி போய்க் கொண்டிருந்தது. ஒவ்வொரு சாலையிலும் நட்டு வைத்திருந்த பெயர்ப் பலகைகளில் படித்த பெயர்கள் இதற்கு முன்னால் கேள்விப்பட்டிருந்தவை போலத் தோன்றினாலும் (ஷாஜஹான் ரோடு, அவுரங்கசீப் ரோடு) சர்தார்ஜி ஊர் சுற்றிக் காண்பிக்கிறாரோ என்ற தேவையில்லாத பயம் மனதைக் குதறிக் கொண்டிருந்தது. இருபது நிமிஷப் பயணத்துக்குப் பிறகு காரை நிறுத்தி என்னிடமிருந்த நண்பரின் கடிதத்தை வாங்கி விலாசத்தைப் படித்தார்.

பிறகு காரைக் கிளப்பி சற்று தூரம் சென்றதும் நிறுத்தினார். இறங்கி அங்கிருந்த சாயாக் கடைக்குச் சென்று கடைக்காரனிடம் ஏதோ கேட்டார். கடையில் இருந்தபோர்டில்சப்தர்ஜங்என்க்ளேவ்என்றுஹிந்தியில் எழுதியிருந்ததைஎழுத்துக்கூட்டிப்படித்தேன்.நண்பரின் விலாசத்தில் அந்தப் பெயர் இருந்தது நினைவுக்கு வந்து தன்னம்பிக்கையைத் தந்தது. சர்தார்ஜி திரும்பி வந்து காரை எடுத்து நாலைந்து வளைவுகளில் காரை ஓடித்துத் திருப்பி கும்பலாய் இருந்த மஞ்சள் நிறக் கட்டிடங்களில் ஒன்றின் முன் நிறுத்தினார். அந்தக் கட்டடத்தின் முன்பு கறுப்புப் பெயிண்டில் எழுதப்பட்டிருந்த பிளாக் வரிசையும் வீட்டு எண்களும் நான் வந்து சேர வேண்டிய இடத்துக்கு வந்ததைச் சுட்டிக் காட்டின.

நான்பையைஎடுத்துக்கொண்டுகீழிறிங்கிஎவ்வளவு என்று கேட்டேன். பயத்துடன் போடப்பட்டிருந்த என் மனக் கணக்கில் ஐம்பது என்று இருந்தது. இருபது ரூபாய் என்று பதிலளித்தார். நான் நம்ப முடியாமல் அவரிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு பலமுறை நன்றி சொன்னேன். என் உள்ளத்தையும் ஏற்றிக்கொண்டு சர்தார்ஜி காரைக் கிளப்பிச் சென்றார்.

நண்பரின் வீடு ஐந்தாவது மாடியில் வெட்ட வெளியில் இருந்தது. அம்மாதிரி வீடுகளை பர்ஸாத்தி என்று அழைப்பார்கள் என்று பின்னர் தெரிந்துகொண்டேன். கதவைத் திறந்த நண்பரின் மனைவி தனியாக வந்து நின்ற என்னைப் பார்த்து, "அவர் எங்கே? என்று ஆச்சரியத்துடன் கேட்டார். நான் ஜார்ஜ் பெர்னாண்டஸ்ஸால் ரயில்வே அடித்த கூத்து பற்றிச் சொன்னேன்.

"ஐயோ அவர் ஸ்டேஷன்லே போய் நிக்கிறதா சொன்னார். சரி அவர் வரட்டும் . நீங்க குளிச்சிட்டு வாங்க, சாப்பிடலாம்" என்றார் நண்பரின் மனைவி.

நான் குளித்து உடை மாற்றி சாப்பிட்டு முடித்தேன். இன்னும் நண்பர் வரவில்லை. ஒரு அரை மணி கழித்து வந்த அவர் என்னைப் பார்த்துத் திகைத்து நின்றார். பிறகு வந்து என்னைத் தழுவிக் கொண்டு, "எப்படி

பயந்திட்டேன் தெரியுமா? ஊர் தெரியாது. பாஷை தெரியாது. எப்படி நீ வரப் போறேன்னு இந்த நிமிஷம் வரை என்னை கவலை அரிச்சு பிடிங்கிருச்சு” என்றார்.

அவர் மனைவி, “நீங்க வர ஏன் இத்தனை நேரமாச்சு? இவர் இங்க வந்தே ஒரு மணி நேரம் இருக்கும் “ என்றாள்

“ஜி.டி. எக்ஸ்பிரஸ் ஸ்டேஷனுக்கு வரதுக்கு முன்னாலய, ஐ.டி.ஓ. பிரிட்ஜ் கிட்ட மேல போக விடாம நிறுத்திட்டாங்கன்னு ஸ்டேஷன்ல சொன்னாங்க. ஸ்டேஷன்லேர்ந்து ஒரு பஸ் பிடிச்சு ஐ.டி.ஓ. போனேன். அங்க ட்ரெயின் நின்னுகிட்டு இருக்கு. நான் எங்கோர்ந்து இவரை தேடறதுன்னு தெரியாம எஞ்சினுக்கு பக்கத்துல இருந்த போகிலேர்ந்து கார்டு வேன் வரையிலும் ஒவ்வொரு பெட்டியா ஏறி இறங்கி மறுபடியும் ஏறி இறங்கி பாத்து கடைசியில ஆள் கிடைக்கலையேன்னு கவலைப்பட்டுக்கிட்டே வந்தா... ம் என்ன ஆனா என்ன, சௌக்கியமா வீடு வந்து சேந்தாச்சுல்ல, அதான முக்கியம்?” என்றார்.

இருபது இருபத்தியோரு பெட்டிகள் அடங்கிய புகைவண்டி அது. அவ்வளவு பெட்டிகளிலும் ஒவ்வொன்றாக ஏறி இறங்கித் தேடிப் பார்த்து வருவதாய் நினைத்தாலே கால் வலிக்கும். ஆனால், இற்றுப் போய் விடும் கால்வலியைச் சற்றும் காட்டாது நிதானமாகப் பேசிக்கொண்டிருக்கிறார். என்ன மாதிரியான மனிதன்!

தாங்கிக்கொள்ள முடியாமல் எழுந்து அவரருகில் சென்று இரு கைகளையும் பிடித்துக்கொண்டு நின்றேன். எதுவும் பேச முடியாதபடி வாய் அடைத்துக் கிடந்தது.

“என்னய்யா இது?” என்று சிரித்துக்கொண்டே என் முதுகில் தட்டிக்கொடுத்தார் வெங்கட் சாமிநாதன்! ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# ந. பெரியசாமி கவிதைகள்



## 1. நெளிந்து கொண்டிருக்கும் பாம்பு

நீர் ஓட்ட ஆற்றுக்கரை
செழித்த வயலின் ஓரம்
அடர் வனத்தில் இருப்பதை
ஒத்ததாகவோ
போலவோ
இல்லை.

மரத்தை வரைந்திருந்தான்.

பச்சைக்கிளி
சிட்டுக்குருவி
காகம்
புறா
எப்பறவையை பிறப்பிப்பான்
மனதின் அடுக்குகள்
ஆர்வத்தை கிளறிட
பாம்பொன்று நெளிந்தோடியது
தொங்கத் துவங்கின வௌவ்வாள்கள்.

கருப்பு பிடிக்குமா
அபத்தமாக கேட்டது
வளர்ந்த வயது.

## 2. ஏக்கப் படலம்

மாலை போர்த்தி
பாதம் வணங்கி நிமிர்கையில்
அந்திமக் காலத்தில் அருந்தியிராத
ஏக்கத்தின் படலம்
மூடிவைத்த கண்களில்.
உதடுகளில் துரு படிந்துகொண்டிருக்க
நினைவுகளில் அவருடனான நாட்கள்
இறந்த காலமாகிக் கொண்டிருந்தது
பறை இசையுடனான ஒப்பாரியை
உடன் மனதுள் இட்டவாறு
பெருத்த டயரில் அடுக்கியிருந்த
கட்டைகளுக்குத் தின்ன
கொடுத்துத் திரும்பினோம்.

பத்திருபது பாட்டில்கள்
சாராயத்தை சுமந்தவாறு
மகிழ்ச்சியோடு வந்தார்
நெடுநாட்களுக்குப் பிறகு
நேற்றைய கனவில்
தாத்தா. ●

**“ந. பெரியசாமி”** <na.periyasamy@gmail.com>

# போர் தீர்வாகுமா?

பிரபு திலக்

ஃபேஸ்புக், வாட்ஸ்அப், டிவிட்டர் உட்பட சமூக வலைத்தளங்கள் எங்கும், "பாகிஸ்தான் மீது இந்தியா போர் தொடுக்க வேண்டும்" என்கிற ஆவேசமான பதிவுகளைக் காண முடிகிறது. "பொறுத்தது போதும், பகை முடிக்கும் நேரம் இதுஞ் பாகிஸ்தான்... போர்... ஆமாம் போர்... பழிக்குப் பழி.... ரத்தத்துக்கு ரத்தம்," என்ற வாசகங்கள் அதிகமானவர்கள் பகிரப்படுகிறது. சாதாரண சனங்கள் மட்டுமல்ல, தமிழின் மூத்த பத்திரிகையாளர் ஒருவரே, "இன்று தேவை சொல் அல்ல செயல். செய்யுங்கள் மோதி, ஏதாவது செய்யுங்கள். அயலவர்கள் இன்னும் 50 ஆண்டுகளுக்கேனும் தலையெடுக்க முடியாமல் எதாவது செய்யுங்கள்" என்று வேண்டுகோள் விடுத்துள்ளார்!

இந்தியத் துணை ராணுவப் படையினர் மீதான புல்வாமா பயங்கரவாத தாக்குதலே இதற்குக் காரணம். கடந்த பிப்ரவரி 14ஆம் தேதி, காஷ்மீர் புல்வாமா மாவட்டத்தில் 54 பட்டாலியன் படைப் பிரிவின் 2500 வீரர்கள் 70 வாகனங்களில் சென்று கொண்டிருந்த போது, அதில் இரண்டு பேருந்துகளின் மீது வெடிமருந்துகள் நிரப்பிய வாகனம் மோதி வெடிக்க வைக்கப்பட்டுள்ளது. இதில் 40 சிஆர்பிஎப் வீரர்கள் கொல்லப்பட்டுள்ளனர். பாகிஸ்தானிலிருந்து செயல்பட்டு வரும் ஜெய்ஷ் இ முகமது என்ற தீவிரவாத இயக்கம் இந்த தற்கொலைப் படைத் தாக்குதலுக்குப் பொறுப்பேற்றுள்ளது. இந்தக் கொடூரத் தாக்குதலுக்கு இந்தியா முழுவதும் இருந்து பெரும் கண்டனமும் எதிர்ப்பும் கிளம்பியுள்ளது. எதிர்க்கட்சிகள் அனைத்தும் அரசுடன் இணைந்து நிற்போம் என உறுதியெடுத்துள்ளன. உலக நாடுகள் பலவும்கூட இந்த தாக்குதலுக்குக் கண்டனம் தெரிவித்துள்ளது.

இந்தப் பின்னணியிலேயே, புல்வாமா தாக்குதலுக்கு பழிக்குப் பழி வாங்க வேண்டும்; பாகிஸ்தான் மீது போர் தொடுக்க வேண்டும் என்ற குரல்கள் எழுந்துள்ளன. தலைநகர் டெல்லியில் உள்ள பாகிஸ்தான் தூதரகம் முன்பு கூடிய இளைஞர்கள், பொதுமக்கள் போராட்டத்தில் ஈடுபட்டனர். இந்த போராட்டத்தில், பாகிஸ்தான் நாட்டு தேசிய கொடியை எரித்த அவர்கள், அந்நாட்டு அரசுக்கு எதிராக முழக்கமிட்டனர். மேலும், இந்த தாக்குதலுக்கு இந்திய அரசு சரியான பதிலடி கொடுக்கவேண்டும் என்றும் வலியுறுத்தி உள்ளனர். இதேபோல், காஷ்மீர், பீகார் உட்பட நாடு முழுவதும் ஆங்காங்கே போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் பாகிஸ்தான் மீது இந்தியா போர் தொடுக்க வேண்டும் என்று ஆக்ரோஷமாகக் கோஷமிட்டனர். தமிழகத்தில், ராணுவ வீரர்களுக்கு மலர் தூவி அஞ்சலி செலுத்திய மாணவ, மாணவிகள், "இந்த தாக்குதலுக்கு இந்தியா ராணுவம் பதிலடி கொடுக்கும் என்ற நம்பிக்கை உள்ளது" எனத் தெரிவித்துள்ளனர். இன்றைய புதிய தலைமுறை போர்களை அனுபவித்ததில்லை. அதன் கொடூரத்தைப் படித்ததுகூட இல்லை. அதன் விளைவே இந்த போர் கோரிக்கை.

இந்த தாக்குதல் சம்பவத்திற்குப் பிறகு பிரதமர் நரேந்திர மோடி, "காஷ்மீர் தீவிரவாத தாக்குதலுக்குக் காரணமானவர்கள் உறுதியாகத் தண்டிக்கப்படுவார்கள். இந்த தாக்குதல் சம்பவத்திற்கு, கடுமையான பதிலடி கொடுக்கப்படும்" என்று கூறியுள்ளார். இதற்கு பதிலாக, இந்தியா தாக்கினால் பதிலடி கொடுப்போம் என பாகிஸ்தான் பிரதமர் இம்ரான்கான் கூறியுள்ளார். இதனால், இந்தியா பாகிஸ்தான் இடையே போர் பதற்றம் ஏற்பட்டுள்ளது.

காஷ்மீர் பிரச்சினை இன்று நேற்று ஊருவானதல்ல; இந்தியா சுதந்திரம் பெற்றது முதல் இருக்கும் பிரச்சினை. ஏற்கெனவே மூன்று போர்களை பாகிஸ்தானுடன் நடத்தியும் தீராத பிரச்சினை. இந்நிலையில், இன்னொரு போர் அந்தப் பிரச்சினையை தீர்த்திவிடும் என நம்புவது கடினமானது. எந்த போரும் காஷ்மீரில் தீர்வுகளைத் தந்துவிடாது என்பதை அதன் வரலாறு அறிந்தோர் உணர முடியும்.

காஷ்மீரில், பிரதான சாலையில், ராணுவ கான்வாய் மீதே பாகிஸ்தான் ஆதரவு தீவிரவாதி ஒருவன் காரில் 350 கிலோ வெடிமருந்துடன் வந்து தாக்குதல் நடத்துகிறான் என்றால், உள்ளூர்காரர்கள் உடந்தையாக இல்லாமல் செய்திருக்க முடியுமா? இந்தத் தற்கொலைத் தாக்குதலை நடத்திய ஜெய்ஷ் ஏ முஹம்மட் இயக்கத்தின் தீவிரவாதி அடில் அஹமட் தர் (வயது 22), உள்ளூர் காஷ்மீரி என்பது குறிப்பிடத்தக்கது. தாக்குதலுக்குப் பயன்படுத்தப்பட்ட வாகனமும் உள்ளூர் வாகனமே. காஷ்மீர் இளைஞர்கள் மத்தியில்

இந்திய அரசு, இராணுவம் ஆகியவற்றின் மீதான வெறுப்பு அதிகரித்துள்ளதையே இது காட்டுகிறது.

ஏன் காஷ்மீர் மக்களில் சிலர் தீவிரவாதிகளுக்கு ஆதரவாக இருக்கிறார்கள்? அவர்கள் மனங்களை வெல்வதைப் பற்றி நமது அரசுகள் சிந்திக்க வேண்டும். போர்தான் ஒரே தீர்வு என ஆவேசப்படுபவர்களும் கூட ஏன் இப்படி காஷ்மீர் மக்கள் மனங்களில் இந்திய அரசு அந்நியமாகியுள்ளது என்பதைச் சிந்திக்க வேண்டும்.

இந்தியாவிலேயே காஷ்மீரில்தான் காணாமல் போகவைக்கப்பட்டோர் ஏராளம். இந்தியாவிலேயே காஷ்மீரில் மட்டும்தான் சங்கம் அமைத்துக் காணாமல் போன குழந்தைகளை / கணவர்களை / பெற்றோர்களை / மனைவிகளைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இப்படித் தேடப்படுபவர்கள் பத்து ஆயிரத்துக்கும் அதிகம் என்பது அவர்கள் வேதனையை, வலியை உணரச் செய்யும். பல்லாயிரம் பெண்கள், காணாமல் போன தனது கணவன் திரும்பி வருவானா எனத் தெரியாமல், விதவை என்கிற சான்றிதழ் பெற முடியாமல், இயக்கங்கள் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இவர்களை 'அரை விதவைகள்' என்கிறார்கள்.

இதைச் சரி செய்து காஷ்மீர் மக்கள் மனங்களை வெல்வதற்கு மாறாக, புலவாமா தாக்குதலுக்குப் பின்னர், தேசபக்தி என்ற பெயரில் இஸ்லாமியரை, குறிப்பாகக் காஷ்மீர் இஸ்லாமியரை எதிர்நிலையில் நிறுத்த முயலும் போக்கு அதிகரித்துள்ளது. இந்தியா முழுவதும் காஷ்மீரிகள், காஷ்மீர மாணவர்கள் தாக்கப்படுகின்றனர். அரசும் மற்றவர்களும் இதைக் கண்டித்திருக்க வேண்டும். ஆனால், எல்லோரும் மௌனம் காக்கிறார்கள். இத்தனைக்கும் கொல்லப்பட்ட சி.ஆர்.பி.எப் வீரர்களில் காஷ்மீர் இஸ்லாமியரும் அடக்கம்.

"இராணுவ வீரர்கள் கொல்லப்பட்டதற்காகக் காஷ்மீரைப் பழிவாங்கல் என்பது தீவிரவாதிகள் மேலும் அதிகமாக உருவாவதற்கே இட்டுச் செல்லும்" என்று இந்திய உச்ச நீதிமன்ற முன்னாள் நீதிபதி மார்க்கண்டேய கட்ஜு கூறியுள்ளது. குறிப்பிடத்தக்கது.

காஷ்மீர் முன்னாள் முதல்வரும் தேசிய மாநாட்டுக் கட்சியின் தலைவருமான ஓமர் அப்துல்லா, ''காஷ்மீரில் அரசியல் தலைவர்களின் பாதுகாப்புகள் விலக்கிக் கொள்ளப்பட்டுள்ளது கவலை அளிக்கிறது. ஒருபக்கம் நாடாளுமன்ற, சட்டப்பேரவைத் தேர்தலுக்குத் தயாராக இருக்கச் சொல்கிறீர்கள். மற்றொரு புறம் காஷ்மீர் மாநிலத்தின் பாதுகாப்புக்கு நாங்கள் தகுதியற்றவர்கள் என்கிறீர்கள். நாங்கள் வன்முறைக்கோ, தீவிரவாதத்துக்கோ ஆதரவானவர்கள் இல்லை. இந்தியா பாகிஸ்தான் இடையே பேச்சுவார்த்தை மூலமே தீர்வு காண வேண்டும் என்று வலியுறுத்துகிறோம். ஆனால், பேச்சுவார்த்தை கோருபவர்கள் 'இந்தியாவுக்கு எதிரானவர்கள்' ஆக்கப்படுகிறார்கள்" என்று வேதனை தெரிவித்துள்ளார்.

இதுபோல் காஷ்மீர் முன்னாள் முதல்வர் மெஹ்பூபா முப்தி, ''இது மாதிரியான நேரங்களில் எழுத்தறிவில்லாத மக்கள்தான் போரைப் பற்றிப் பேசுவார்கள். இந்தியா, பாகிஸ்தான் இரு நாடுகளுமே அணு ஆயுதங்களை வைத்துள்ளன. பேச்சுவார்த்தை என்ற ஒரு வழி இரண்டு தரப்புக்குமே இருக்கிறது. எனில், போர் குறித்த கேள்விகள் எழுப்பப்படுவது ஏன் என்று புரியவில்லை'' என்று தெரிவித்துள்ளார்.

பல்வேறு கணிப்புகளின்படி பாகிஸ்தான் 120 அணுக்குண்டுகளையும், இந்தியா 90 முதல் 110 அணுக்குண்டுகளையும் கொண்டுள்ளன எனக் கூறப்படுகின்றன. பொக்ரான் குண்டுவெடிப்பு நடத்தப்பட்ட நேரத்தில் முன்வைக்கப்பட்ட பல்வேறு கருத்துகளில் சில ஞாபகம் வருகின்றன. பாகிஸ்தான் நம் மீது பிரயோகிக்கும் அணுக்குண்டுகளால் ஏற்படும் பாதிப்புகள் ஒரு பக்கம் இருக்க, பாகிஸ்தான் மீது இந்தியா பிரயோகிக்கும் அணுக்குண்டுகளாலே நமக்குப் பாதிப்பு இருக்கும். அவ்வளவு பக்கத்தில் இரு நாடுகளும் இருக்கின்றன. இந்தியாவால் பாகிஸ்தானின் பிரயோகிக்கப்படும் அணுக்குண்டின் கதிர்வீச்சு வட இந்தியா முழுவதும் இருக்கும். மேலும், பாகிஸ்தான் தாக்குதலாலும் வட இந்தியா முழுவதுமே பாதிக்கப்படும். அணுக்குண்டுகளை பொறுத்தவரைக்கும் 'முதலில் பிரயோகிப்பதில்லை' என்ற என்ற நிலைப்பாட்டை இந்தியா எடுத்துள்ளது. ஆனால், பாகிஸ்தான் அத்தகையை நிலைப்பாட்டை முன்வைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இன்னொன்று 350 கிலோ வெடிகுண்டை ராணுவ கான்வாய் செல்லும் சாலைக்குக் கொண்டுவருவது வரைக்கும் தடுக்க முடியாத நமது உளவுத்துறையை நம்பி ஒரு மாபெரும் போரில் இறங்குவது சரியாக இருக்குமா?

கடந்த 50 ஆண்டுகளாகக் காஷ்மீரில் நடைபெற்று வரும் சூழலைக் கூர்ந்து கவனிப்பவர்களுக்கு ஒன்று தெளிவாகப் புரியும். இந்தியா, பாகிஸ்தான் ஆகிய இரு நாட்டு மக்களும் இணக்கமான நல்லுறவையே விரும்புகின்றனர். இருநாட்டு எல்லை நெடுகிலும் உள்ள மக்களிடையே பண்பாட்டு ரீதியிலான ஒத்திசைவும் பரிமாற்றமும் இன்றளவும் நிலவுகின்றன. அதை வளர்த்தெடுக்க வேண்டும்.

போர் மக்கள் விரோதமானது. அது ஒரு கூட்டுச் சாவு. போர் ஆரம்பித்தால் எல்லையில் மட்டுமல்ல, உள்நாட்டிலும் ஒவ்வொரு நாளும் கொடூரம் நிகழும்.

எல்லாவற்றுக்கும் மேலாக நமது ராணுவ வீரர்களின் நிலை குறித்து யோசித்துப் பார்க்க வேண்டும். மக்களின் ஆவேசத்துக்காகப் பலியிட அவர்கள் வீடியோ விளையாட்டுகளில் வரும் பொம்மைகள் அல்ல. ஒவ்வொரு ராணுவ வீரனுக்கும் அம்மா, அப்பா, மனைவி, குழந்தைகள், அக்கா, தங்கை, அண்ணன், தம்பிகள் இருக்கிறார்கள். அவர்கள் தன் மகன், கணவன், அப்பா, அண்ணன், தம்பி பத்திரமாகத் திரும்பி வரவேண்டுன் என கவலையுடன் காத்திருக்கிறார்கள். அவர்கள் உணர்வுகளை மதிப்போம்.

எனவே, இந்த விவகாரத்தை இந்தியா ராஜதந்திரத்துடன் அணுக வேண்டும். பாகிஸ்தான் மீது போர் தொடுப்பதைவிட, உலக அரங்கில் பாகிஸ்தானை எப்படியெல்லாம் தனிமைப்படுத்த வேண்டும் என்பது குறித்து நமது ஆட்சியாளர்கள் யோசிக்க வேண்டும். இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தானை ஊட்டி வளர்க்கும் சீனா போன்ற நாடுகளிடமும் இந்தியா கவனமாக இருக்க வேண்டும். ●

# துணிகரமான விளையாட்டு மட்டுமே விளையாட்டு

மார்டின் பட்லர்
தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்

*போர்ச்சுக்கீசியநாட்டில்வசிக்கும்மார்டின்பட்லர்,சென்றநூற்றாண்டைச்சேர்ந்தரஷ்யமெய்ஞானியானகுர்ட்ஜிப்அவர்களின்நேரடிமாணவியான ரீனா ஹேண்ட்சின் உதவியுடன், ஆன்மப் பயிற்சிகளில் பல்லாண்டு காலம் ஈடுபட்டவர். மனித நிலைமைகள் பற்றிய ஆழமான புரிதலுக்கு இவர் வருவதற்கு ஸ்பினோஷா போன்ற தத்துவவாதிகளையும் முறையாகக் கற்றிருக்கிறார். என் காலத்தையும் என்னைச் சுற்றியுள்ள நிலைமைகளையும் புரிந்துகொள்வதற்கும் இந்தச் சூழ்நிலைகளுக்குள் எனது விழைவுகள், ஆசைகள், வலிகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொள்வதற்கும், எனக்கு வழங்கப்பட்டுள்ள வளங்களினூடாக நிறைவாகவும் நீதியாகவும் இருப்பதற்கும், மார்டின் பட்லரின் எழுத்துகள் உதவிகரமாக இருக்கின்றன. மார்டின் பட்லர் என்னிடம் ஏற்படுத்திய பயன்விளைவை இன்னும் சில வாசகர்களும் அடையலாம் என்ற நம்பிக்கையில், எனக்குப் பிடித்தவற்றை மொழிபெயர்க்கிறேன்.*

வாழ்க்கையை வாழ்வதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒரு விலங்கின் வாழ்க்கையை வாழலாம்; மனித உயிரின் வாழ்க்கையை வாழ்வதுஇன்னொருவழி.மனிதஉயிர்கள்ஆச்சரியகரமாக அரிதானவை.

விலங்கின் வாழ்க்கையை எளிதாக வரையறுத்து விடலாம். அதன் முயற்சிகள், விழைவுகள், கனவுகள் அனைத்தும் உயிர்தரிப்பது இனப்பெருக்கம் செய்வது நோக்கிய உந்துதலால் வழிநடத்தப்படுவதே.

பணம் சம்பாதிப்பது, மந்தையின் அங்கீகாரத்தை வேண்டுவது, ஓரளவு ஆதிக்கம் செலுத்தும் வலிமை, குடியிருப்புஉருவாக்கம்,உணவுத்தேடல்ஆகியவற்றில்தான் நம்மில் பெரும்பாலானவர்கள் ஈடுபட்டிருக்கிறோம். விலங்குகளும் இந்த எல்லா விஷயங்களையும் செய்கின்றன. அத்துடன் உயிர் தரித்திருப்பதற்கான வாய்ப்புகள் மேம்படும் போது நாம் அருமையாக உணர்கிறோம். அது குறையும்போது நாம் துயரப்படுகிறோம்.

ஒரு விலங்கின் வாழ்க்கையைத்தான் பெரும்பாலானோர் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். வேறு வகை வாழ்க்கையை அவர்களால் கற்பனை செய்ய முடியாது. விலங்கிருப்பின் வலிகளையும் அதன் சந்தோஷங்களையும் அவர்கள் அனுபவிக்கிறார்கள். சிலருக்கு விலங்கின் வாழ்க்கை போதாமல் இருப்பதால், ஏதோ ஒன்றின் இழப்பை உணர்கின்றனர். அப்போதுதான் ஒரு தேடல் தொடங்குகிறது. மதம், ஆன்மிக மரபுகள், சுய உதவி, தத்துவம், மனோவியல் தொடர்புடையதாக அந்தத் தேடல்இருக்கும்.இந்த விழைவுகள் எல்லாவற்றின் பொதுக் காரணியாக புரிதலுக்கான விருப்பம் இருக்கும். ஒரு மனித உயிரியின் வாழ்க்கையை வாழ்வதற்கானதுதான் இந்தப் புரிதலுக்கானமுயற்சிகளாகும்.இதனாலேயேநமதுவிலங்கு இயல்பைநாம்புறக்கணிக்கவேண்டுமென்பதாகவோ,அதன் சந்தோஷ, துயரங்களை தடுத்தாட்கொள்ளும் சக்தியைப் பெறுவதாகவோ புரிந்துகொள்ள வேண்டியதில்லை. நமக்குள் வளர வேண்டிய ஒன்றைக் குறித்த புரிதல் அது.

புரிதலுக்கான தேடல் முயற்சியில் அதற்கேயுரிய அபாயங்கள் இல்லாமலில்லை. பாம்புத் தைலம் விற்பவர்களிடமும் போலி குருக்களிடமும் உடனடியாக சிக்கிக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. யாரோ ஒருவரிடம் ‘பதில்கள்’ அனைத்தும் இருப்பதான நம்பிக்கையும் உள்ளது. மனித உயிர் போல வாழ்வதற்கு நாம் தீர்க்கமான அறிவைப் பயன்படுத்தித்தான் புரிதலுக்கான முயற்சி களை எடுக்க வேண்டும். நாமே முயன்று கண்டுபிடிக்கும் பதில்கள் மட்டுமே பயனுள்ளது. நாம் நம்மை, இந்த உலகத்தை புரிந்துகொள்ளப் போராடுகிறோம். நாம் நம்மைப் பூட்டியிருக்கும் கருத்துருவ, புலனுணர்வு சார்ந்த சிறைக்கு வெளியே ஏதாவது இருக்கக்கூடுமாவென்று பார்ப்பதற்கு முயற்சிக்கிறோம். அந்தப் பயணம் வழிகளற்றதும் இலக்கற்றதுமாகும். அத்துடன் அந்தப் பயணம் பலவீனர்களுக்கானதுமல்ல.

விலங்கு தொடர்ந்து திருப்தியைத் தேடிக்கொண்டும் எதையாவது செய்து அந்தச் செயலுக்கான பரிசைத் தேடிக்கொண்டுமிருக்கும். மனித உயிரைப் பொருத்தவரை, புரிதலுக்கான முயற்சிதான் பரிசு என்பது தெரிந்திருக்கும். மன அளவில் எந்த உறுதியான நோக்கமும் இன்றி புரிதலுக்கான முயற்சியை ஒரு மனிதன் செய்வதற்கான காரணத்தைச் சிலர் மட்டுமே புரிந்துகொள்ள முடியும். விலங்கு அதைப் புரிந்துகொள்ளாது.

புரிதலுக்கான தேடல் என்பது திட்டவட்டமான அறிவார்த்த நடவடிக்கை போலத் தொனிக்கலாம்; ஒரு பொழுதுபோக்குச் செயல்பாடாகவும் அர்த்தப்படலாம். நமது உணர்வுகள், மனம், உடல் அனைத்தும் செயலில் உள்ளபோதுபுரிதல்வருகிறது.நம்மைப்புரிந்துகொள்வதற்கு ஈவிரக்கமற்ற நேர்மையும் தளராத தைரியமும் தேவை. துணிகரம் இல்லாத விளையாட்டு விளையாட்டே அல்ல. அத்துடன் இந்த விளையாட்டுதான் உண்மையிலேயே விளையாடத் தகுதியானது.

விலங்காகவாழ்வது விலங்காகஇறப்பதும்தான். மனித உயிராகவாழ்வதென்பதுஒட்டுமொத்தமாகவேறொன்றைக் கோருகிறது. ஒவ்வொரு நபரும் தங்களுக்கானதைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒருகட்டத்தில் மேஜையில் தங்களை முழுமையாகப் பணயமாக வைக்க வேண்டும். அதுதான் விளையாட்டில் துணிகரம். ●

# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

**நியூ புக் லேண்ட்ஸ்**
வடக்கு உஸ்மான் ரோடு,
தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி : 044 - 2815 6006

**ரம்யா புக் வேல்ட்**
எண். 160, தலைமைத் தபால்
அலுவலகம், விழுப்புரம்.
கைபேசி : 94431 78915

**A.K. சந்திரய்யன் & சன்ஸ்**
எண். 252/161B, செரி ரோடு,
சேலம்.
தொலைபேசி : 0427 2410096

**திருமால் புக் ஷாப்**
எண்.17/A, பெங்களூர் சாலை,
கிருஷ்ணகிரி.
கைபேசி : 94436 31941

**விஜயா பதிப்பகம்**
எண். 20, ராஜா தெரு,
கோவை - 641 001.
கைபேசி : 94438 50000
தொலைபேசி : 2394614

**புக்ஸ் & புக்ஸ்**
எண். 29, நியூ ஸ்கீம் சாலை,
பொள்ளாச்சி - 624 001.
கைபேசி : 98650 05084.

**அருணை புக் சென்டர்**
திருவூடல் தெரு,
திருவண்ணாமலை - 606 601.
கைபேசி : 92453 32365

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**
எண்.79-80, மேற்கு கோபுர வீதி,
மதுரை - 625 001.
தொலைபேசி : 0452-2344106

**சர்வோதயா
இலக்கியப் பண்ணை**
எண்.32/1, மேற்கு வெளி வீதி,
மதுரை-1.
கைபேசி : 98946 42007

**குமுதம் புக் சென்டர்**
எண். 29, VOC பஸ் நிலையம்,
பழனி.
கைபேசி : 98428 43479

**மகேஸ்வரி புத்தக நிலையம்**
எண். 29, கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸ்,
ஜீவாபாய் மேல் நிலைப்பள்ளி அருகில்,
ரயில்வே ஸ்டேஷன் சாலை, திருப்பூர்.
கைபேசி : 94420 04254

**பாண்டியன் புத்த அகம்**
எண். 793, வடக்கு மெயின் தெரு,
பிருந்தாவனம் கிழக்கு,
புதுக்கோட்டை - 622 001
கைபேசி : 99766 93072

**பாவேந்தர் புக் ஸ்டால்**
எண். 1, கனகசபை நகர்,
நகராட்சி காலனி,
மருத்துவக் கல்லூரிச் சாலை,
தஞ்சாவூர்.
கைபேசி : 93600 18384

**மார்க்கண்டேயன்
புக் காலரி**
கும்பேஸ்வரர் சன்னதி,
கும்பகோணம் - 612 001.
கைபேசி : 96298 15580

**இளங்கோ புக் சென்டர்**
எண். 51/5, நாராயணப் பிள்ளை தெரு,
மயிலாடுதுறை.
தொலைபேசி : 04364-226188

**அறிவு புத்தக நிலையம்**
தெற்குத் தெரு, திருவாரூர்.
கைபேசி : 94431 25561

**பாலா தினகரன்
நியூஸ் ஏஜென்சி**
காரைக்கால்.
கைபேசி : 94431 20637

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**
எண். 4, பெரியார் பழைய
பஸ் நிலையம், திருநெல்வேலி.
கைபேசி : 98946 66890

**ஈகிள் புக் சென்டர்**
எண். 1A/25, சிதம்பரம் மெயின் ரோடு,
பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி.
கைபேசி : 94436 33333

**சித்ரா தேவி
கல்லூரி புக் சென்டர்**
எண். 280, மெயின் ரோடு,
கோவில்பட்டி - 628 501.
கைபேசி : 98943 25574

**சுதர்சன் புக்ஸ்**
எண். 4, பெல் ஸ்டேஜ் டவுன்,
S.P. அலுவலகம் சாலை,
நாகர்கோவில் - 629 001.
தொலைபேசி : 04652-228445

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

**அம்ருதா** இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : **96005 79149 / 97510 51526**

# அட்சரா வெளியீடுகள்



ரூ. 290/-

**கோதையின் காதல்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 395/-

**திருக்கோளூர் ரகசியங்கள்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 80/-

**சொர்ண பைரவர்**

ஸ்ரீ வேம்பு சித்தர்

ரூ. 200/-

**திவ்ய பிரபந்தம்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 90/-

**சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்**

நா.அங்கமுத்து முதலியார்

ரூ. 250/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 220/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 130/-

**அபிராமி அந்தாதி**



**அட்சரா பதிப்பகம்**
12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,